ஸ்ரீ அத்வைதார்த்தப்பிர

என்னும்

## சங்கரத்வேஷியரின்

# வாய்ப்பூட்டு.

(இரண்டாம் பாகம்.)

இது
திருக்களராண்டவாகிய
ஸ்ரீ வீரசேகரஞானதேசிகர் பாதசேகரரான
ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளால்
இயற்றப்பெற்று

தஞ்சாவூர்
ஸ்ரீ வித்தியா விநோதினி முத்திராசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1911.

உ

ஓம் ஸ்ரீமகாகணபதயே நம:

சிவமயம்.

# ஸ்ரீ அத்வைதார்த்தப் பிரகாசிகை.

## உ-வது பாகம்.

ஓரன்பர் நிந்தைகணிறப்பிய ஒரு சுவடியை வெளிப் படுத்தியிருந்தனர்; அதன் கண் ஸ்ரீவிஷ்ணுவாதிகளை நிந்தித்தலுடன் சுருதி சிரோபாகத்தையும் நிந்தித் திருந்தனர் விஷ்ணு நிந்தைசெய்யற்பாலதன் றென்ப தைப்பற்றி இந்நூலின் கணுற்ற முதற்பாகத்தே கூறியிருத்தலினானும் அறியாது பொறித்த பிராஹ் மணாதி நிந்தையைப் பூர்வபக்கஞ்செய்து கண்டித்தல் சாஸ்திரமரியாதை யன்றாதலினானும் நூலறிவுற்ற நுண்ணறிவினரென வெண்ணி யியற்றிய ஔபநிஷத நிந்தையை மாத்திரம் இவரும் இவர் போன்ற ஐயப் பாடினரும் பொருளறியாத இருளால் மருளாவண் ணம் தவிர்ப்பான் ஸ்ரீமகாகணபதியின் அனுக்கிரக மானுஷலீலா விக்கிரகமா யெழுந்தருளியிருந்த ஸ்ரீவீர சேகர ஞானதேசிகர் பரபரியாயத் திருக்களராண்ட

வராய எமது தேசிகேந்திரரை முக்கரணங்களானும் பணிந்து முயல்வாம்.

"இது நிற்க வேறு சிலர் நிஷ்களப்பிரமம் ஒன்றே நித்தியமென்றும், நடேச சோமாஸ்கந்தாதி சகளமெல்லாம் அதிற்றாழ்ந்த அநித்தியமென்றும், நிஷ்களமே நம்மால் உபாஸிக்கத் தக்கதென்றும், அப்பிரமம் நாமேயென்றும், அச்சம் அன்பு அறிவு முற்றுங் கைவிட்டு வாய் கூசாது துணிந்து கூறி" யெனவிவ்வன்பர் அச்சம் அன்பு அறிவு முற்றுங்கைவிட்டு வாய் கூசாது புகன்று மனங்கூசாது நினைந்து கண் கூசாது கண்டு மெய் நடுங்காது இருந்து கரங்கூசாது பொறித்தனர். அந்தோ! இவ்வன்பர் பெருமையையென்னென்னவரைவாம். "நிஷ்களப்பிரமம் ஒன்றே நித்தியமென்றும், நடேச சோமாஸ்கந்தாதி சகளமெல்லாம் அதிற்றாழ்ந்த அநித்தியமென்றும்" உரையாடாநின்றனரென்றனரே இவர்மதியின் றுதியே றுதி ஆ! ஆ!! ஆ!!! நிஷ்களப்பிரமம் ஒன்றே நித்திய மென்னலடாதென்றும் நடேச சோமாஸ்கந்தாதி பல நித்தியம் பகரற்பாலதென்றுமன்றோ கருதிப்பொறித்தனர் "ஏகமேவாத்துவிதம்" என்னும் திருமறை முடியை மறந்தனர்போலும் இதன் அறியபொருளை முதற்பாகத்தே இனிது தெளிதலிவர் சிரங்கொண்ட கடனும். பல நித்தியவத்துக்கள் எந்நிலைக்களத்தேயிருப்பதோ அந்நிலைக்களமியாது, தனக்குத் தானே யாதாரமாய நிட்

களமெனின்? அந்நிட்களம் விபுவா? பரிச்சின்னமா? இறுதிய தநித்திய தோடத்தை யெதிர நோக்கலின் முதலதென்றே மொழிய வேண்டும்; வேண்டவே அதன்கட்பல நித்தியமிருப்பின் அது விபுவாதலியாங்ஙனம்? சமான சத்துப் பொருட்களொன்றிருக்கு மிடத்து மற்றொன்றிராதென்பதை யேனோராயா தொழிந்தனர். ஆகாசமுங் குடமு மொப்பச்சூக்கும தூலத்தாலேலுமெனின்? அற்றாயின் அவ்விரண்டிற்கும் இவ்விரண்டொப்பக் காரியகாரணப்பான்மை வாராது விடுமா? விடாதாகவே காரியம் அநித்தியமென இவரேவலிதிற் கொண்ட கொள்கையை யறிஞரே யினிது காண்மின். பரிபூரணத்திற் கானிவரினும் வருக சகளநித்தியமெனக்குடன்பாடேயெனின்? சிரச்சேதம் வந்தாலும் வருக கரங்கொய்யாது விடுப்பதேயுடன்பாடென்னுமவனை யன்றி யிவரியாரோ அறியேம். காரியகாரணமன்றித் தூலம் சூக்குமத்தை யாசரிப்பதிற்கு யாது கொலோ நிதரிசனம்? இனி அந்நிட்களமே கிருதகாடிந்ய மொப்பத் தடிப்புற்ற இச்சகள மென வரைந்துளே மாதலின் நீரதைக்கண்டு தெளிவுறாது ஏனிக்கூத்தாடுகின்றீரெனின்? சாதிக்கத் தகாதது இத்திருட்டாந்தமென்க. என்னை நவநீதத்தையுருக்கியதாலுண்டாகிய திரவகிருதம் மறித்துஞ்சீதசம்சர்க்கத்தானே கடினப்படல் கண்டுளேம் மறித்தும் தேஜோசம்சர்க்கமுறினே இழகலையும் கண்டுளேம்

கடினவிழுகற் கட்குக்காரணமிருப்பதுபோன்று தாட்டாந்தத்திலின்மையின் இந்நிதரிசனம் நிதரிசனப்போலியேயாம். உயிர்களினதிட்டமு மதனின்மையுங் காரணமிருப்ப நிதரிசனப்போலி யென்றது யாங்ஙனமேலுமாலோவெனின்? அற்றேல் மகாப்பிரளயத்தே சகளத்தைவிடவன்றோ வேண்டிவரும் வரவே நித்தியமென்னுங் கோட்பாடு கோட்பாடன்றேவாம். அத்துணை மாத்திரமே சாலுமெனின்? அதனை யாங்கோடாதது எந்நூலாற் றெளிந்ததோ சற்று விரிக்க.

இந்நிதரிசனம் நன்னிதரிசனமென்றோ ரையதைச் சற்றாராயுதும்:— உருவப் பொருளாய இழுகிய கிருதம் உருவப்பொருளாய கடின கிருதமாதலமையும், அருவப் பொருளாய சச்சிதானந்த நிட்களம் உருவப் பொருளாய சகளமாமா? ஆமேல் இழுகிய கடின கிருதங்கட் கேக ரசமுண்மைபோல் இதற்குமுறல் வேண்டும். அங்ஙனமின்றோ வெனின்? இன்றென்று யாவர் தாமறியார் நிட்களமோ சச்சிதானந்த மாத்திரமுற்றது சகளமோ நாமஉருவத்தோடுற்றது. நிட்களமோ சகத திட்டானம் சகளமோ அங்ஙனமன்றும் மற்றோ ஆரோபித்த சகத்திற்கு அனுக்கிரகிப்பதாம் அதுவும் நைமித்திகமா மென்றுணர்ந்து கொள்க.

இன்னும் திரவகடினங்கள் கிருதத்திற்குக் குணமாய் நிற்றல் போல் நிட்கள சகளங்கள் பரசிவத்திற்

குக் குணங்களாம் ஆகவே "நிர்க்குணமென்னு மறைக்கு முரணும் அன்றியும் சகளம் போல் நிட்களமும் திரிகாலா பாத்யமாகா தெனத் தெற்றெனத் தெரிக. பிள்ளைவரத்திற்குச் சென்று புருடனைப் பறிகொடுத்தவர் போன்று சகள நித்தியத்தைத் தாபிக்க நிட்கள நித்தியமும் போய்ச் சூனியவாதியாதலுமாம். என்னை? இவ்விருகுணபாவ காலத்தே அப்பரசிவம் எத்தகைத் தாயுளதெனக் கடாவின் விடையிறுக்க வலியின்மையி னென்க. ஒன்றொருகாலிருக்கு மென்ஞான்று மெனின்? முற் கூறுதிக்கு முரணன்றோ வாம். மேலும் இழகிய கிருதங் கெட்டுக் கடின கிருதமாய தொப்ப நிட்கள பரசிவங் கெட்டுச் சகளமாய தென்றுங் கூறுவரு மன்றோ? என்னை? காரணங் கெட்டே காரியம் பரிணமிக்க வேண்டியிருத்தலி னென்க. எனவே கடின கிருத காலத்தே இழகிய கிருதமிராமையின் மற்றதினு மற்றன்றோ மாசுபுகும். ஏகதேச பரிணாம மெனின்? நிதரிசனமியாதுகொல்? நெய்ப்புழு சாணித்தேளெனின்? அவ்வவ்வவச்சேதகமாய் நெய்சாணியே பரிணமித்திருத்தலி னென்க.

மேலும் நிர்விகாரப் பரசிவத்திற்கு விகாரம்வருமா? வந்தால் நிர்விகார மென்னும் மறைப்பகை வாராதா? வரினு மென்னெனின்? நாத்திகத்வம் வாராதா? வந்தாலும் வருகவெனின்? அத்தகையருக்கு ஆத்திக வாதாடலே தகாதென்க.

அற்றேல் நும்பக்கத்தி னுடன்பா டின்றோவெ னின்? உடன்பாடே, சீவர்களதிட்ட வயத்தால் விவர்த்தமாய்ப் புலப்பட லெனக்கொண்டிருத்தலின். இவ்விவர்த்த வாதத்தே யுபாதியுள்ளளவு பிரதீதியும், உபாதி தணர்ந்தவழி சொரூபத்திற் கானியின் றிடப் பிரதீதியுங் கொண்டிருத்தலி னியாதொரு கோது மின்றாம். இருந்துவரையேல் மறப்பான் கரமுங்கல முமாய் எதிர்பார்க்கின்றோம். ஆனால் தெய்வங்களையும் பெரியோர்களையும் நிந்திப்பதை விடுத்துச் சாஸ்தி ரார்த்த மாத்திரமா யெழுதுவது பெருந்தன்மையே யன்றிச்சிறியவர் போலும லியலர் போலும் நிந்தை யைக் கையாடுவது அன்றும் நூலாராய்ச்சி யிருப்பின் நூலே யாராயலாமே நிந்தித்துப் பாபத்தை மூட்டை கட்டவேண்டாமே. மறுக்கமுடியாதேல் தாங் கொண்ட கொள்கைப்பாலேனும் நின்று பரநிந்தை யைக் கைவிடுத்துய்வாராக. இது விஷயங்களில் விரிக்குமவா விருக்கினும் நூற்பெருக்கு மெனுங் கருத்தாற் சுருக்கினு மென்க.

இனி "நிஷ்களமே நம்மால் உபாஸிக்கத் தக்க தென்றும்" என்றன்றோ கூமிட்டார், மறைமுடிவா தியர் சித்த சுத்தியில்லானுக்கு, நிட்காம கரும உபாச னையையும் உள்ளானுக்கும் சகளத்தியான வாயிலாய் நிட்களத்தியானம் பெற அனுக்கிரகித்தருளுகின்ற

னரேயன்றி இவர் கூற்றுப்படி யன்றும் இவரிங்ஙனம் மதித்தது சற்சாதுக்கள் சகவாச மின்மையினுனும் சிற்சில மறைமுடிநூல்களைத் தான் றேன்றித் தம்பி ராஞைய்க் குருவருளின்றி முன்பின் முரணுற மேலெ ழுந்தவாரியாய் ஓதினமையினுனு மென்க சற்சங்க மிருப்பி னிவ்வுண்மையை

“நெஞ்சமே யினிப்பாவனுதீதமாய் நின்றிடின் றெனினிற்பா, யெஞ்சுற்றகல் புரணபாவனையை யோர்ந்திலை யெனினுலகெல்லா, மஞ்சனக்கள்ன் மே னியென்றோர்ந்திலை யெனிலருள் சுரந்தெம்பால், வஞ்சமற்றிடும்படிக் கிவணடைந்த தோர்வடிவை யோர்ந்துய்வாயே.”

என்னும் வைராக்கிய சதகக் கவியிலேயே யுணர லாகாதா? ஸ்ரீமதாண்டவர் முதலிய அருந்தவர்க்கு ஸ்ரீ சாலிவாடீசுவரி முதலிய சகளசாக்ஷாத்கார சரித்திரம் கேட்டேனு முணரலாகாதா? ஸ்ரீ வித்தி யாரண்யப் பெருந்தகை முதலியோர் காயத்திரிதேவி யைப் பிரசன்னமாக்கிச் சொர்ணமழை பெய்வித்த மையாதி கோடானு கோடிசகள சாக்ஷாத்கார சரிதா மிருதத்தை யான்றோர்பாற் கேட்டேனு முணரலாகா தா? ஸ்ரீமச் சங்கரபூஜ்ய பகவற்பாதாசாரிய சுவாமி கள் திவ்ய சரிதாமிருதமாகிய ஸ்ரீ சங்கரதிக் விஜயத் தையேனும் படித்துணரலாகாதா? சகளகிருபையா

லன்றி நிட்களம் பெறலருமைத் தென்பதற் கெ தனை நிதரிசனம் வேண்டும் இவருஞ்சிரமேற் கோடும் ஸ்ரீ மதப்பய்ய தீக்ஷித சுவாமிகளேயே யேன் கவனிக்க லாகாது, இன்னுமிது விஷயத்தில் ஷை ஸ்ரீ தீக்ஷிதஸ் வாமிகள் வாக்கியாமிருதத்தை முதற்பாகத்தே காண் பித்திருத்தலைக் கண்டமைவாராக.

இன்னணம் சகளத்தாலேயே நிட்களம்பெறற்பால தாமென்றதால் "நிஷ்களமே நம்மானுபாவிக்கத்தக்க தென்றும்" என்னுமிவர்கூற்று கூற்றுக்கிரையாற்றிய வாறு கண்டுகொள்க.

இஃதிங்ஙனமாக "அப்பிரமம் நாமேயென்றும், அச்சமன்பு அறிவுமுற்றுங் கைவிட்டு வாய்கூசாது துணிந்துகூறி" யென்பதையுஞ் சற்றுயுதும்:—இதன் கண் அச்சாதி, கூறியென்பதந்தமாயதற்கிவர் பாற் றிருப்பிய மறுமொழியே சாலுமென்றமைந்து சாஸ் திரீயத்திற் செல்லுதும், நிந்தித்தல் நிஷித்தமாதலின்,

அப்பிரமம் நாமேயென்பது தப்பென்றனரே, பிர மாணமின்மையினுலா? யுக்தியின்மையினுலா? ஆதிய தேல்,

'கைவல்லியோபநிஷத்' "சூக்ஷமத்திலும் அதிசூ க்ஷமமாயும் நித்தியமாயும் இருக்கின்ற பரப்பிரஹ் மய்யாதோ அது நீ; நீயேஅது.........சாக்ஷியாயும் சின்மாத்திரமாயும் இருக்கின்ற சதாசிவன் யான்."

'அமிர்தபிந்தூபநிஷத்' "அந்தப்பிரஹ்மமே யானென்றறிந்தால் பிரஹ்மமேயாகின்றனன் துணிபாம்."

'மைத்திரேயோபநிஷத் 2-வது அத்தியாயம்' "தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது அதிலிருக்கின்ற ஜீவனானவன் சிவனே. அஞ்ஞானமான நிர்ம்மாலியத்தைத் தள்ளி "அவன் நான்" என்னும் பாவனையினாலே பூஜிக்கவேண்டியது."

'ஷை 3-வது அத்தியாயம்' "நித்தியனாயும் சுத்தனாயும் சதாசிவனாயு மிருக்கின்றேன்........அவன் யானாயிருக்கின்றேன்...பரமான்மாவாயுஞ் சிவனாயுமிருக்கின்றேன்...நாசமற்றபிரஹ்மமாயிருக்கின்றேன்."

'ஸ்கந்தோபநிஷத்' "அவனே பிரஹ்மம்; அந்தப் பிரஹ்மமியான்றான் சமுசயமில்லை. ஜீவனே சிவன்; சிவனே ஜீவன். அந்தஜீவன் சிவனே தான். உமியினாற் கட்டுப்பட்டிருக்கின்றபோது நெல்லாயிருக்கின்றது. உமியற்றதாயின் அரிசியாயிருக்கின்றது அங்ஙனமே ஜீவனுங்கட்டுப் பட்டிருக்கின்றனன். கருமம் நாசமானால் எப்போதும் சிவனாயிருக்கின்றான் பாசத்தினாற் கட்டுப்பட்டிருக்கிறவரை ஜீவனாயிருக்கின்றனன். பாசத்தினின்றும் விடுபடினஞ்ஞான்று சிவனாயிருக்கின்றனன் அவன் நானேயென்னும் பாவனையுடன் பூஜிக்கவேண்டியது அபேதமாய்ப் பார்க்கின்றதே ஞானம்.

'ஆன்மபோதோபநிஷத்' "யான் பிரஹ்மத்தைவிட வேறல்லாதவுத்தமன்."

பைங்களோபநிஷத் 4-வது அத்தியாயம் "யானேபிரஹ்மம் என்றறியாதவனுக்குமுத்தியுண்டாகிறதில்லை."

சூதசங்கிதை காலஅளவையுரைத்த அத்தியாயம். "மன்னிய ஆன்மாக்க ளெங்குஞ் சிவசொரூபமென்றே மதித்திடார் மாயையான் மறைப்புண்டு நானீ, யென்னமிருபேதமே குறித்துழல்வர். 15.

'ஷை சமாதிவிதியுரைத்த அத்தியாயம்.' "மேவருமறைகளத்து விதமெனவிளம்புமச்சொற், றூவரும் பொருள்வேறன்மை தானென வுரைப்பரற்றூற், சீவர்கள் பலருந்தானாய் நிற்டனந்தேவதேவன். (3)

'ஷை முத்திநிலையுரைத்த அத்தியாயம்' "இத்தகு முத்தி வேறுயாம் வேறென்றெண்ணங் கொள்ளேல், உத்தமமறைய பேதமுணர்த்திடுபலதேயுண்மை."(31)

'ஷை பஞ்சாக்கரமந்திர முரைத்த அத்தியாயம். மாயையாற்பேத நடையராகி, யியங்குறு சீவர்கள் சிவனோட பேதபாவனை செய்வதென்பர் தக்கோர். (9)

'ஷை வேதாவிரோதமுரைத்த அத்தியாயம்.' ஆதலினாற் சத்திய அத்துவிதபரமாகிய ஆரணத்தினுக்கும், காதலில் சற்பிதத்துவித பரமானமறையினுக்கும் காணுங்காலை, ஓதுபிரதீதியினால் விரோதமேயுள

தாகத் தோன்றினும், மேதகுபரமார்த்தத் தவிரோத மென்றுணர்வீர் மேன்மைமிக்கீர். (5)

அவ்வேதம், துவிதத்தை அனுவாத முன் செய்தத் துவிதமே சொல்லுமீற்றில். (7)

'கூர்மபுராணம்' 'இந்திரத்துய்ம் நன் முத்திபெற்ற அத்தியாயம்.' சீவான்மாவினைப் பரமான்மாத்தன்னொடும் பிறிதறவொடுக்கி. (42)

வேறின்றி, யமுங்கலில் சிவமாந்தன்னுருத் தானை யமர்ந்துயரின் பமுற்றதுவே. (47)

'ஷை சாங்கியயோக முரைத்த அத்தியாயம்.' பிரமம்யானேயென மறைவிளம்புமன்றே. (29)

'வாயுசங்கிதை' 'ஞானநிலையையுரைத்த அத்தியாயம்.' ஆன்மாவை, முறையிலந்தமாயை தான் முடும லபாயைகெட, வுறைவதுவே சிவமென்னவுரைப்பரா லெனவுரைத்தான். (10)

மலமாயும் வீந்ததற்பின், ஒவலில் அப்புருடனே சிவனென்னவுறைவன். (18)

'ஷை பரசிவப்பிரபாவ முரைத்த அத்தியாயம்' சிவனை, மருளின்றுகியே யுணரின் மன்னுபசுத்வமொடு பாசம் ஒருவபமுவாளேந்து சிவனுருவாய்ப் பொருந்துமென்றுரைத்தான். (15)

'பிரஹ்மகீதை கைவல்ய உபநிடதார்த்தம்உரைக்கு

மத்தியாயம்' அந்தப் பிரமமேயவன்றான் அறியாமை யினலைப்பரனைப், பந்தப்படுமோர் சீவனெனப் பார்ப் பார்பவத்தே பதைக்கின்றார். (19)

'ஷ கடவல்லி சுவேதாசுவதர வுபநிடதங்களின் அர்த்தமுரைக்கும் அத்தியாயம்' உண்பவன் சீவன் ஊட்டுவான் சிவன் இவர்தமக்கிங்காய பேதந்தானுபா தியால் வந்ததல்லதபேதமே யாகும்.

'ஷ சாந்தோக்கிய வுபநிடதத்தினுமத்தியாயத் தின் அர்த்தத்தை யுரைக்கு மத்தியாயம்' நீ யென்கி ன்ற வார்த்தைக்குப் பொருளாயென்று நிற்பதுவே நானென்கின்ற வாசகத்தின் பொருளாய் நின்று நாடு வது நானென்கின்ற வாசகத்தின் பொருளாய் நாடிநிற் பதுவேய், நீயென்கின்ற வாசகத்தினிற்கும் பொருளு நிலை பெறவே. (53)

அது நீயெனும்வாய் மொழியாமதனை லறியும்படி சொன்ன திவ்வாரணமே.

'ஷ முண்டகோபநிடதார்த்த முரைக்கும் அத்தி யாயம்' இந்த வுடப்புறை சீவபரங்களெனப்படும் அன்னமிரண்டந் தவிரண்டினு மொன்று வினைப்பய னங்கு நுகர்ந்திடுமாம் தொந்தமறும்பரமொன்று முனைது சொலப்படு பேதமில்வான் வநதகடத்தி லகப் படு பேதமெனப்படு மாயையினல் (25)

தற்பர னுருவஞ் சித்தேதற் பரனிடையேயக், கற்பித சீவன்தானு மதானக் காலந்தச், சிற்பொருளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ, அற்பமும் வேறாகாது சித்தாகாரத தாலே. (26)

பரசீவர் பின்னரெனிற் போதத தொரு பேதம்பிறவாதே. (27)

மறையாலு மிருதிசொலும் வழியாலும் வருவதவிர் இறையார்தமருளில் வருவது ஏக மெனு முணர்வு. 28

சீவனும் பரமுஞ் சின்மயமாகு மாதலா லொப்பெனச் செப்பல்—மேவியொன்றாகி விடுதலே யன்றி வேறு வேறாகுமோ வீடு. (31)

சீவன் தன்னுருவான சிவத்தை. (34)

‘ஈசுவரகீதை சாங்கியயோக வத்தியாயம்’ இந்த ஞானத்தை யெய்திய வின்பத்தால் அந்தமில் பிரமத்துருவாயினோர் (3)

‘ஷை தத்துவதரிசன அத்தியாயம்’ பரம வொளியாம் பரம்பரனே, ஞானந்தன்னால் வேறறவே நானென்றறிந்த நல்லோன். (11)

‘சூதகீதை பரம விஞ்ஞானமுரைத்த வத்தியாயம்’ முன்னும் அவித்தையாற் பசுப்பேதமும் மொய்வலிய மாயையாற்—பன்னும் பரதத்துவ பேதமுங் கற்பிக்கப் பட்டது. (6)

'ஷை ஆன்மானான்மவிவேகமுரைத்த வத்தியாயம்' அக்குரு கடாக்ஷமும் சிவப்பிரசாதத்தாலே யமைய மேவு, நக்கசத்துச் சீவன் முதலானதெல்லாம் சிவ மென்னு ஞானந்தானே, தக்க சிவப்பிரசாதமாகுமந்த ஞானமுள்ள தலைமையோனே மிக்கசிவஞானியாவா னென்று நான் மறையும் விள்ளுமாலோ. (23)

'ரிபுகீதை 1-ம் அத்தியாயம்' சத்தியமா மச்சிவமே நாமேயென்றும் சலனமிலா வகண்ட சிவஞானம் பெற்று மித்தையதாம் பவபந்த மனைத்து நீக்கி மெய் யுணர்வா னந்த பரசிவமேயாவார். (83)

'ஷை 15-வது அத்தியாயம்' ஆன்மாவே துரியபர சொரூபமாகும். (30)

'ஷை 17-வது அத்தியாயம்' அது நானென்னும் பின்னமிலாப் போதத்தாற் பிரமமாவாய். (2)

'ஷை 18-வது சஞ்சேப வத்தியாயம்' ஜகசீவ பரங் களெல்லாம் பிரம ரூபம். (42)

'ஷை 21-வது அத்தியாயம்' நித்தமுமே யகண்ட பரசிவநா னென்றே நினைப்பது வாஞ் சிவபக்தி சின்ம யமாம் பரமசிவந்தானேயாகி (47)

ஸ்ரீபகவற்கீதை 6-வத்தியாயம் இயாதொன்றிந்தப் புலனறியா வளவி லின்பமாயிருக்கும், யாதொன்றி

னைச் சென்றடைந்தோர்கள்பின்னை யதனிலிரண்டா கார். (16)

'ஷ்டி 18-வது அத்தியாயம்' சாந்திபெறவே யோரி டத்தும் பின்னமடையா தொன்றாகி நின்ற பொருளின் பேருருவாம். (45)

'பாரதம் உத்தரகீதை 2-அத்தியாயம்' அம்ஸோக மென்கிற அஜபா மந்திர சொரூபத்திலே, நானே அவன், அவனே நான் என்று அன்னியோன்னியக் கூட்டுறவு சொல்லுகின்றமையால் அச்சித்த விருத்தி நிரோதமான யோகத்தினாலே இகாமுத்திரார்த்த பல போகவிரத்தனை யோகீசுரனுடைய பாவனாத்தியா னமே பிரமமென்று சொல்லப்படும். (3)

நானே பிரமமென்று ஏகாக்கிர மனதுடனே எவன் க்ஷணமாத்திரமாகிலும் தியானம் பண்ணிவரு கிறானோ அவன் சகல பாவங்களி லிருந்தும் விடுபட் டுக் கிருதார்த்தனாவான். (31)

எவனானாலென்ன? வேதசாஸ்திரங்கள் நன்றாய்ப் படித்திருந்தும் நானே பிரமமென்று அறியாதேபோ னால் அவனுக்குப் படித்த பிரயாசை மாத்திரமே பலன். (41)

'ஷ்டி 3-வது அத்தியாயம்' ஆரூடஞானி அணிமா தியோக சித்தியை யபேட்சியாமல் பிரமமாகவேயிரு ப்பன். (10)

தானே பிரம சொரூபமாய் (11)
நானே பிரமமென் றெப்போது எவனறிகிறானோ 12.

'ஆரியப் புலவர் பாகவதம் 3-வது கந்தம் கபிலர் தத்துவமுரைத்த வத்தியாயம்' ஆவிவேறெனப் பேத மடைந்திடும், தேவர் மாதவர் தேர்சனகாதியர், பூவினொடும் போயடைந் தன்னவன், மேவுஞான் றிவண் மீட்டு முதிப்பரால். (56)

காதல் விட்டுக் கருதிய பேதமாம், ஏத நீங்கினர் எய்துவர் முத்தியின், பேதமாகு முபாசனை பெற்றிடின், வேதனாயினு மீளவுந் தோற்றுமால். (55)

மோக நீங்கி முயல்வுறின் மாதவம், ஆக மொன்றுத லின்றிய பேதமாய், மாக நாடர் வழுத்தவரு சித்தோ, ஏகமாகி யிறைகுறி நீ யென்றான். (59)

'ஷை 12 கந்தம் பரீக்ஷித்து வீடுபெற்ற வத்தியாயம்' கடத்துறை வானு மக்கட முடைக்கின்வான், இடத்தொடு மொன்றுபட்டிருக்கு மாறு போல், சடத்துறை யுணர்வு மச்சடந் தணக்கினீங், கடக் கரும் பரத்தி னொன்றாகி வைகுமே.

'திருவிளையாடற்புராணம் நாரைக்கு முத்திகொடுத்தபடலம்.' சித்தமாசுகழீ இச்சிவமாயினார் (6)

ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலம்சம் பிரகலாதர்தோத்திரஞ்செய்தது.

நானும் அவனாகவேயிருக்கிறேன்.

'கற்கடிகதை, பிரமத் தொளிதானே முடிவில்பர மாகியசீவன் (2)

'ஷை நிருவாணப்பிரகரணம்' மனமாகினேவே சங் கற்பம் மனத்தினினைவற்றது சிவமே

'ஷை உற்பத்திப்பிரகரணம்.' ஏகமாய்வடிவின்றிப் பிறப்பிறப்பிலாப் பிரமமிலங்கு நொய்தாய் (7)

'ஷை சிகித்தாவசன்கதை.' தேற்றுகின்ற விவ்வகை யாலறிந்தே னன்றாய்ச் சிவமானேன் வேறொன்றுந் தெரியக்காணேன் (151)

'ஷை பிரகலாதன்கதை' நானே நீயாய் நீ நானாய் ஞானவடிவாய் முடிவின்றித் தானே யாகியண்டத் தின் றலையாய்ப் பரமதத்துவ மாங்கோனே (38)

'ஷை சனகராசன்கதை.' எல்லாம் பிரமநாமதுவே யென்றெண்ணி (2)

'சிவஞானபோதம்.' அவனே தானேயாகியவன் னெறி—யேகனாகியிறை பணிநிற்க—மலமாயை தன்னொடு வல்வினையின்றே

'தேவிகாலோத்தரம்.' இப்படியே பாவித்துச் சலி யாதான் யாவனவன் அப்பிரமமாதலா லமுதமாமூகி யாய் (47)

அறிவாகிச்சுத்தனு யறிவானுய்வேருகிக்
குறியாதுகொளல்வீடு கூடாதுகூறுங்கால்
அறிவார்தாமிலராகிச் சோகாதியடையானுய்ப்
பிறியாதபரப்பிரமமென நிற்பன் பெண்ணணங்கே ()

'தேவாரம்.' பாஞ்சபூதிகத் தண்ணின்றபண்பனே, ஆய்ந்தாய்ந்து அறிவாலறிந்தபின், தேய்ந்துதேய்ந்து சிவமல்லதில்லையென், றேய்ந்துபோன தென்னுள்ளமுமெள்ளவே

'திருவாசகம்.' சிவமேபெறுந்திருவெய் திற்றிலேன், பேசினோமென்றோர் பேதமின்மை, நாமொழிந்து சிவமான வாபாடி.

வான்கெட்டு மாருதமாய்ந்தழனீர் மண்கெடினுந்
தான்கெட்டலின்றிச் சலிப்பறியாத்தன்மையனுக்
கூன்கெட்டுயிர்கெட்டுணர்வு கெட்டென்னுள்ளமும்
போய்—நான்கெட்ட வாபாடித்தெள்ளேணங்
[கொட்டாமோ.

பேதமில்லதோர் கற்பளித்த பெருந்துறைப் பெரு வெள்ளமே, சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி, பேதங்கெடுத்தருள்செய் பெருமையறிய வல்லா ரெம்பெருமானுவாரே.

உயிருண்கின்ற வெம்மானே சித்தமலமறுவித்துச் சிவமாக்கி

'திருமந்திரம்-கடுஞ்சுத்தசைவம்.' நானென்றுந்தானென்று நாடிநான்சாரவே, தானென்றுநானென்றிரண்டிலாத்தற்பதந், தானென்றுநானென்றதத்துவநல்கலாற், றூனென்றுநானென்றுஞ் சாற்றகில்லேனே (4)

ஷை சம்பிரதாயம், நானென நீயென வேறில்லை அவனும் அவனுமவனையறியார் அவனையறியில் அறிவானுமில்லை, அவனும் அவனும் அவனை யறியில் அவனும் அவனும் அவனிவனுமே (12)

'ஷை உடலிற் பஞ்சபேதம்.' தானவனாகியதற்பரம், ஷை பராவத்தை இவனும், அவன்வடிவமே

'ஷை நின்மலாவத்தை.', தானேசிவமான தன்மை தலைப்பட (11)

தன்னையறிவதறிவாமஃதன்றிப்
பின்னையறிவது பேயறிவாமே (15)
தானவனாகும் சமாதிகைகூடினால் (16)
தானவனாகிய ஞானத்தலைவனை (21)

'ஷை முப்பதம்' தொம்பதந்தத்பதந் தோன்றுமசி பதம் நம்பிய சீவன் பரஞ்சிவனாய் நிற்கும் (5)

'ஷை முச்சூனியம் தொந்தத்தசி' சீவன்பர சிவனுமே (6)

'ஷை தத்துவமசி வாக்கியம்' ஆகிய அச்சோயந்தேவ தத்தன்னிடத்தாகிய விட்டுவிடாத விலக்கணைத் தாகு பசாந்தமே தொந்தத்தசியென்ப (3)

தொம்பதந்தத்பதஞ் சொல்லுமசிபத நம்பிய முத்துரியத்துமே நாடவே யும்பதமுப்பதமாகு மூயிர் பரன் செம்பொருளான சிவமெனலாமே (6)

ஷை மஹாவாக்கியம்.

நீயதுவானுயென நின்றபேருரை
யாயதுநானேனெ னென்னச்சமைந்தறச்
சேயசிவமாக்குஞ் சீர்நந்திபோருள்
ஆயதுவாயுனந்தானந் தியர்குமே (1)

'ஷை ஞானகுருதரிசனம்' திரிமலந்தீர்ந்து சிவனவனுமே (4)

'ஷை ஞானோதயம்' நானென்றுந் தானென்றுநாடினேனுடனு நானென்றுந்தானென்றிரண்டில்லை (8)

'ஷை சிவரூபதரிசனம்' உணர்வுமவனே யுயிருமவனே.

'ஷை அணைந்தோர் தன்மை' சித்தஞ்சிவமாய் மலமூன்றுஞ்செற்றவர் சுத்தசிவமாவர் தோயார்மல பந்தம் (13)

'ஷை தோத்திரம்' சிவன்றான் பலபல சீவனுமாகி நவின்றுனுலகுறு நம்பனுமாமே (30)

## திருமந்திரம்.

தன்னையறியாதுடலை முன்றானென்றான்
தன்னைமுன் கண்டான் றுரியன் றனைக்கண்டான்
றன்னுதுரியமுமீசனோ டொன்றாக்கால்
பின்னையும்வந்து பிறந்திடுந்தானே.

'ஆகமவாக்கியம்' பாசபத்ததேஜீவா பாசமுத்தஸ்தே சதாசிவா சிவஜ்ஜீவோ ஜீவோ சிவ-சற்ஜீவோ கேவல சிவா ஜீவோ சிவோ சிவோ ஜீவாசற்ஜீவா கேவல சிவா திஷ்டே பூர்வம் ஆத்மா ஏகமேவா சரீரபின்னம் பரமாத்மனேகம் சர்வசாக்ஷி சிவோஹம் பிரத்யேகத்மசிவோ ஹம்.

கந்தரலங்காரம்.' வரையற்றவுணர் சிரமற்றுவாரிதி வற்றச் செற்ற, புரையற்றவேலவன் போதித்தவா பஞ்சபூதமுமற் றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக், கரையற் றிருளற்றெனதற் றிருக்குமக்காட்சியதே (61)

'கந்தரனுபூதி.' ஆனவமுதே யயில் வேலரசே, ஞானாகரனே நவிலத்தகுமோ, யானாகிய என்னைவிழுங்கி வெறுந்தா னாய்நிலைநின்றது தற்பரமே, வானேபுனல் பார்கனன் மாருதமோ, ஞானோதயமோ நவினுன் மறையோ, யானேமனமோஎனையாண்டவிடந், தானே பொருளாவது ஷண்முகனே.

'சௌந்தரியலகரி.' தாமாகவுனைநினைவோர் தவமி றுகத் தனமிறுகி, மாமோகப்புன்முறுவல் மனங்கவரக் கடைவிழியால்

'சிவவாக்கியர்பாடல்.' உருக்கலந்து நின்றபோது நீயும்நானுமொன்றலோ, என்னகத்துளென்னையன்றி யாதுமொன்றுமில்லையே, அவனுநானு மெய்மயங்கி அநுபவிக்குமளவிலே, அவனுமில்லை நானுமில்லை யாருமில்லையானதே.

'பிரபுலிங்கலீலை.' பூதநீயலைபொறிகளு மலையலை புந்தி, ஏதுநீயலை யிவற்றினை மயங்கி யானென்னும், போதநீயலை யென்றிவையனைத்துமே போக்கி, சோதி யாகிய பிரமமே நீயெனச்சொல்லி. ஞேயஞானஞா துருவெனுமிவை பலநிற்கு, மாயின்வேறறு முத்தி யன்றது சகமாமென், றேயுமாறிது அதுவெனுஞ் சுட் டலாவியல்பை,மாயைமாறிய தேவிபாலருளினன் வள் ளல்.

'வள்ளலார் சாத்திரம்.' பதிபசுபாச விளக்கத்தில் பதிவிளக்கம். செம்புயிராகுமந்தச் செம்பினிற் களிம் புபாசம், செம்பினிற்களிம்புபோனால் செம்பொனுமா றுபோல, நம்பனார்ஞானத்தாலே நானெனும்மலம் போம் போனால், நம்பனாரவனென்று நான்மறை சொல்லுமன்றே. (12)

'ஷை அதிவன்னுச்சிரமியிலக்கணம்.' பாம்பிதென் றுணர்ந்தபோது பழுதையேயில்லைவெய்ய, பாம்பிதன் றெனவுணர்ந்தால் பழுதையேயானாற்போலச், சோம் புறுகுறும்பி யென்னிற்றுகளுறு சீவனாகும், சோம்பு ருக்குறும்பி யென்னிற்றுகளறு பிரமமாவான், (9)

'ஷை மஹாவாக்கிய விலக்கணம்.' என்றுமிருந்தபடி இருக்குமியல் பேயென்னுமொரு வேதம், ஒன்றே யொழிய விரண்டாம்வதிலையென்னு மொருவேதம் வென்றிப்பரமும் நீயும் வேறில்லை யென்னுமொரு வேதம், தன்றுமதுவே நீயானுயென்றே சொல்லு மொருவேதம். (12)

ஊனையொதுக்கி யுணர்வாக்கிவிட்டபினர் நானே பிரமமென நாடு. (64)

உள்ளமசையாதுயர் துருவன்போனிற்கில் வள்ள லுருவானய்மதி. (69)

'ஷை பாசமோசனவியல் (குறள்.)' சீவனத்தாற் சீவ னெனல் சீவமிறந்தா லிந்தச்சீவனே யந்தச் சிவம். (62)

'ஷை தசகாரியவுபதேசம் சிவயோகம்,' நானேசிவன் சிவனேநானென்று நாடிவெறுந்தானுகி நின்றநிலை தா னன்றோ. (25)

'ஷை ஞானவிளக்கம்.' சுத்தசிவம், நீயென்று சொல்லினன். (6)

'ஷை அத்துவிதக் கலிவெண்பா.' ஈசன்வேறியான் வேறென்றெண்ணுகின்ற பாதகரை நீசரெனக்கண்டு நினையென்றான் (22)

'ஷை கர்நாமிர்தம்.' சைவசித்தாந்தமெல்லாம் தானவனுகிநிற்றல், மையறுவேதசித்தமற்றது நானேயென்னல், உய்வகைக்கிரண்டு மொன்றென்றோதி யென்னுயிர்க்கிலாபஞ், செய்தசத்குரவனீயே திருப்புலிவனத்துளானே. (63)

'ஷை சிந்தனை வெண்பா.' அதுவே நீயாமென்றருமறைகள் சொல்லும், எதிர்சிவனே நீயானுயென்னு முதுசைவம்: வேறேவேறன்றே சொல்வேதியனே விண் விசும்பும், வேறேவேறன்றே விளம்பு. (13)

'ஷை இத மொழியுபதேசம்.' முப்பாழும் பாழென்றறைந்தார் திருமூலர், அப்பாழும் பாழென்றறைந்தார் சடகோபர். (46)

'பிரமய அந்தாதி.' மெய்யைப் பொய்யென்றான் வெளியை நல்லவீடென்றான், சைவத்துறைகாழிச் சம்பந்தன், ஐயமற, நின்போதம் போமிடத்தே நீயே சிவமென்றான், என்போதத்துள்ளே யிருந்து. (1)

உற்றுணரினீயே யுயர்பிரமமென்பதுவும்
மற்றசிவன்றானுய் வகுப்பதுவும்—முற்றும்
இறந்தவிடத்திரண்டு மேகமேயென்றான்
சிறந்தசீகாழி வருதே. (7)

அஞ்ஞானநிவிர்த்தி.

ஊனிறந்துயிரிறந்து வுணர்விறந்துளமிறந்து,
தானுபர்பரமிறந்து தருமனமுதலிறந்து
வான்முதல் முழுதிறந்து வளரொளியாகிநின்ற
தானிறந்திருந்த வின்பந் தனையுரை செய்யலாமே.

'குமாரதேவர் விருத்தாம்பிகை துதி.' விரிவுறுமுரு வநாம மதகற்றின் விடையங்கண் விளங்குருவதனுன் மருவுறுபொறிபோம் பொறியறக் கரணமாய்ந்திடுங் கரணமாய்தலினுல். புருடன்முன்னேமூஞ் சுத்தமோ ரைந்தும்போமிதாற் சச்சிதானந்தம், கிரியையற்றி லங்கு மென்றனள் விருத்தகிரியமர் பெரியநாயகியே

குமாரதேவர் சாஸ்திரம் அத்துவிதவுண்மை.

தன்னைச்சீவனெனத் திரிவாய்த் தானின்றுணர்
தலஞ்ஞானம் தன்னைப்பிரமமெனத் துணிவாய்த்
தானின்றுணர்தலே ஞானம். (78)

ஷை பிரமாநுபவ அகவல்.

நானாரெனவே ஞானநற்குருவை
வினவிடலித்தகை விளங்கியபிரமம்
நீயேயென்று நிச்சயமாக
தத்துவமசிகொடு சாற்றினனன்றே.

அவிரோதவுந்தியார்.

நானற்றபோதத்தே ஞானமுத்தியை
நானென்னனஞ் சொல்வதுந்தீபற
நான்மறைக்கெட்டா தென்றுந்தீபற. (67)

'கைவல்யம்' தன்னையுந் தனக்காதாரத் தலைவனை யுங் கண்டானேற் பின்னையத் தலைவன்றானாய்ப் பிரம மாய்ப் பிறப்புத்தீர்வன்; கடநீரின் மேகநீரிற்கண்டவா னிரண்டும் பொய்யே கூடவானும் பெரியவானுங்கூடி யொன்றுமெப்போதும் இடமான பிரமஞ்சாக்ஷியிர ண்டுமெப்போது மேகம் திடமாகச் சுவாநுபூதிசிவோக மென்றிருந்திடாயே. (82)

அதுநீயாகும் நீயதுவாகுமென்னும் அர்த்தமு மக ண்டமென்றே யசிபதவைக்கியங்காட்டும். (81)

'வேதாந்தசூடாமணி' விடயமதுசிவசீவர்தமகேகத் துவமாம், நீகடவுசொரூபநிசஞ்சச்சிதானந்தநித்தியம் பூரணமாக நீ நினைந்து கொள்ளே (29)

இகலிலா அறிவுமாத்திரமாகி நின்ற விலக்கியமாம் பிரமகூடத்தவுயிர்கொள்ளிற்புகரிலா அது இதுவே இதுவதுவேயென்னப்பொருந்துதா தான்மியம்வந்து றுமெனவேயறிக (124)

என்று மெவ்விடத்தினுமோருடம்பு முறுதொன்று யிருந்த சச்சிதானந்தசிவசொரூபமாதல் நன்றிதருவி தேககைவல்லியமென்றிசைப்பர் (182)

'மெஞ்ஞான நிலையம்' பூதபௌதிகமாய்ப் பொலி பேதமும், யேதமின்றியிருஞ்சிவமாய்விடப், போத மாம் அனுபூதியிற்கண்டவர், ஆதியாமதிவன்னுச்சிர மரே.

'சமாதி' ஆதலாலாகாயத்திற் கடாகாயம்வேறுனைப் போல் பேதமிலான்மா சீவன்பரனெனப் பிராந்தியா லேயோதிடாநின்ற தன்றியுணர்வுடைப் பேதமின்று னீதியானிறைந்த சீவனிலையதிவ்வணமென்றே.

'மெய்மொழி' தாக்கிலாஞான யோகத்தன்மை தா னியாதோவென்னில் சாக்கிரங்களுச் - சுழுத்திதுரியந் தான் றுரியாதீதம் சாக்கிரமதனிற் கலைடு சதுர்த்த சகரணமியாவுஞ் சாக்கிராதீதமாதல் தற்பரமாவதென் ருன்

'திருவம்மானை' உண்டுதேக்கிட்டெங்கு மொன்று னேனம்மானை, உண்மைக்கோருத்தரந் தானில்லைகா ணம்மானை, சத்தியமானது சத்தேகாணம்மானை, தற் போதப்போன விடந்தற்பரமம்மானை.

'சிவானந்தமாலை' மித்தையுடற்கட்டறுத்து மெய்ய ருளாய் மெய்யொழிக்குந், தத்துவமுங் கேவலமுஞ் சார்வகற்றி, சுத்தத், தனியாகித்தானும் போய்த் தற் பரமாய் விட்டாற், சனியானிது சத்தியம்.

'திருப்போரூர்ச் சந்நிதிமுறை அட்டகம்' அறிவோ

டறிப வனறியவருபொருளடைய வொருபொருளா கியே. சசிவன்னபோதம்.

ஊக்கியப்பர சீவர்தங்களுடம்பிரண்டு மிலக்கணு வாக்கியப்படி நீக்கிணுலொருவத்து வேபரவத்துவே()

'தத்துவராயர்குணலே' நாமொழிந்துசிவமாயிருந்த மைபாடீரே.

'கை பாடுதுறை' ஊனேமறிவதென்றா தேடாகா ளம், உணர்வேபிரம மென்றாதேடாகாளம், நானே அவனுமென்றாதேடாகாளம், நானுவதில்லே யென்றா தேடாகாளம்.

'ஞானசதகம்' இயம்புஞ்சாதி மூன்றுமிறந்துளபிர மந்தானும் முயன்றுணர்கின்ற ஞானங்கைவரின் முத் தியெய்தும்.

'அநுபவதீபிகை' மெய்ப்படுசிவத்தோ டொன்று காவிடில் பவமேவுமன்றே.

'தாயுமானவர்' தன்னேயறிந்தவர் தம்மைத்தானுகச் செய்த நுளுஞ்சமத்தை, 'அத்துவிதமானவைக்கிய வநுபவமே.' தன்மயமாய் நின்றநிலேதானேதானுகி நின் றால், நின்மயமாயெல்லாம் நிகழும்பராபரமே.

என்னேத்தானுக்கொண்ட சமத்தைப்பார் தோழி அதுவானுலதுவாவரதுவேசொல்லும்

யானெனல்காணேன் பூரணநிறைவில்யாதினுமிருந்

தபேரொளி நீ, தானெனநிற்குஞ்சமத்துற வென்னைத் தன்னவனுக்கவுந்தருங்காண்

எனதென்பது பொய்யானெனல் பொய்யெல்லா மிறந்தவிடங்காட்டும், நினதென்பதும் பொய் நீ யெனல்பொய் நிற்குநிலைக்கே நேசித்தேன்

போதமென்பதே விளக்கொவ்வும் அவித்தைபொய் யிருளாம தீதிலாவிளக்கெடுத்திருட்டேடவுஞ் சிக்கா தாதலாலறிவாய் நின்றவிடத்தறியாமை யேதுமில்லை யென்றெம்பிரான் சுருதியேயியம்பும்.

என்பனமுதலிய கோடானுகோடிப்பிரமாணங்கள் வேதாகம புராணேதிகாசஸ்மிருதிகளினும், அவற்றை யனுசரித்த ஆன்றோர் வாக்கியங்களினு மிருத்தலின், மிகவிரிக்கின்றூற் பெருகு மெனுங்கருத்தால், ஒரு சிறிதேகாண்பித்தனம். மதிமானுயிருப்பின் இத்துணைபோதாதா: விபரீதமதியரேல், எத்துணைகாண்பித்துமென்பயன்? இத்துணைப்பிரமாணவலிகொண்டு அகம் பிரஹ்மாஸ்மி, பிரஹ்மைவாஹம் என்றுசிந்திப்பாரையிகழ்வது, தீசிகெள தமசாபவலியேயாம் நிந்தித்தலைவிடுத்து இவர்சாஸ்திரார்த்தம் எவ்வளவு செய்ய விரும்பினும் விரும்புக தாமும் அடஞ்செய்யாமல் இப்பிரமாணங்களைச் சற்று ஓர்ந்து பார்ப்பில் புண்ணியவிசேடத்தாற் பிரஹ்ம சாக்ஷாத்காரம் வந்தாலும் வரக்கூடும் என்னை? முன்னர்விரோசனன்

பிரஹமாவின் உபதேசத்தைத் தூலமாய்க்கேட்டு உலோகாயதமதஸ்தாபனஞ்செய்து பின்னொருபுண்ணிய விசேடத்தாலீசுவரானுக்கிரகத்தையடைந்து பிரஹ்ம சாக்ஷாற்காரமுற்றுத்தன்மைந்தனுபமாபலிக்குமுபதே சித்ததொப்ப ஆதலுங்கூடலின். இவர் துவிதவைசவத் தைக்கைவிடாரேல், தேவாராதியையும், வேதாகமத் தையும் நினைக்கவுமருகரல்லர்: நினைப்பினோ போலி யேயாம் பிரமாணமெனிற்சிரத்தைவேண்டாமா? தான் பிடித்தமுயலுக்கு மூன்றேகாலென்னின் முடியுமா? ஆன்றோர்சென்றவழி செல்லல்வேண்டாமா? இன்னு ங்கலியும் அதிகரிக்கவில்லையன்று அதற்குள்ளா இந் தக் கூத்தாடவேண்டும்! அக்கூத்தில் விருப்பேல்இன் னுஞ்சிலசன்மங்கள் கழிந்தாடலாமே சாலுமிதோப தேசம்; பிரகிருதத்தேசெல்வாம்.

இறுதியதேல், அப்பிரமம் நாமே யென்பதில், நா மென்னும் கிளவிக்கு எப்பொருள்கொண்டு நிடேதிக் கின்றனர்? ஆகமெனக்கொண்டா? 1. அல்லதென் வாக்காதி கன்மேந்தியங்க ளெனக் கொண்டா? 2. அல்லதென் பிராணாதி யெனக்கொண்டா? 3. அல்ல தென்கட்புலனாதி ஞானேந்திரியங்க ளெனக்கொண் டா? 4. அல்லதென்மன மெனக்கொண்டா? 5. அல் லதென்மதியெனக் கொண்டா? 6. அல்லதென் சித்த

மெனக்கொண்டா? 7. அல்லதென் அகங்காரமெனக் கொண்டா? 8. அல்லதென் அஞ்ஞானமெனக்கொண்டா? 9. அல்லதென் பஞ்சபூதமெனக் கொண்டா? 10. அல்லதென் மாயையெனக்கொண்டா? 11. அல்லதென் பிரமமெனறே கொண்டா? 12.

1-வதேல், ஆகம் அசுத்தமாயிருத்தலினும், பிரமம் சுத்தமாயிருத்தலினும், ஆகம் துக்கமயமாயிருத்தலினும் பிரமம் சுகமயமாயிருத்தலினும், ஆகம் அநித்தியமாயிருத்தலினும் பிரமம் நித்தியமாயிருத்தலினும், ஆகம் சருமாதியாறு தத்துவங்களோடு கூடியிருத்தலினும் பிரமமங்ஙனமன்றாதலினும், ஆகம்ஜடமாயிருத்தலினும் பிரமம் சித்தாயிருத்தலினும், ஆகம் சாவயவமாதலினும் பிரமம் நிரவயவமாதலினும், ஆகம்பரிணாமியாதலினும் பிரமம் அபரிணாமியாதலினும் என்பன முதலிய அளவிறந்த வேற்றுமைகளிருத்தலினும், இன்னணமே, சசிவன்னபோதம் எனதாடை பொன்பூமகன்றையல் பாய்மா விபங்கண் முகங்கால் கைமெய்யென்னவென்றுந், தனதாயுரைப்பான் வகுத்திந்தவூனொத்தானென்றயர்த்துஞ் சொலத்தக்கதன்றே.' 'தாளாகவூராழியார் வென்னில்விணு தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா, நாளாமலர்ச்சென்னி கூந்தற் கொடித்தேர் நாணுஞ் மூர்வானில் வேறுகநாடே'

'கடக்குஞ் சரம்பண்ணி யுண்ணின் றொருத்தன் கை பாதகன்னங்கண்மெய் போலியக்கும், கிடக்கும் நடத்தா விடத்திவ்வுடம்புங் கிடக்கு மொருத்தன்ன டத்தா விடத்தே.' 'ஒரு கூறுமலமாகு மொரு கூறுடம்பாகுமொரு கூறுமனமாகு முண்டற்றவன்ன, மிரு கூறு நீயாகி யொரு கூறுநீயா மிழிக்கும்மலஞ் சோரிடப்பட்டவுடலே.' கிளராதரத்துண்ணு மன்னஞ்சுடக்கை கிட்டப்பொருதே யிருந்தார் முனிந்தார், களராதுறுபொன்று முயிர்போகவன்றே. தழற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே' 'நிழற்பாவை கண்ணாடியிற் பாவைகைகாணிமிர்க்கும் முடக்குமிவன் செய்யுமெல்லாந், தொழிற்பாலவாமற் றிவ்வுடலஞ்செய்தொழிலுஞ்சுடர் ஞானவடிவானவன் செய்தொழிலே.' 'அறிகின்ற பொருளென்று மறிவாணில் வேறே யாவிவ்வூனக நானென்னலாமோ, செறிகின்ற புள்ளல்லவே கூடிவ்வகையே செடமானவுடனின்னில் வேறென்றுதெளியே' 'நிலமாகும்வற் பென்றனெகிழ்கின்ற நீராநெருப்பாமிதிற் சுட்டவெல்லாமுமனிலஞ் சலமானபுரையான வானிந்தவுடலஞ் சடமானவைம்பூதவுருவங்கடாமே. 'ஞானவாசிட்டம்' 'மொய்யுடனேயென்னின் மூவேழுநரகுமஃதே, வெய்யவன்றுயரா மேனும் மெய்யையானென்ன வேண்டா, வையமில் கேள்வி நல்லோர் நினைவரோவனைத்தாமூனுங், கையுறத்தின்பரோனுநாய்ப்பிணங்கவரார்நீசர். என்பதாதி ஆகான்மசிடே

தாஸ்பதமாக அளவிறந்த மானங்களிருத்தலினுனும் கூடாதெனமறுத்த லெமக்குமுடன் பாடேயாம்.

2-வதேல், பூதகாரியங்களாய, சடங்களாய், பரிச்சின்னங்களாய், பரார்த்தங்களாய், அற்பக்கிரியா கரணங்களாய், துக்கவேதுக்களாய், விகாரிகளாய், சனித்துமரிப்பவையாய்ச் சாவயவாதி அனேக வனர்த்த வர்க்கங்களோடு கூடியிருத்தலினுனும் பிரமமோ அங்ஙன மன்றியிருத்தலினுனும், இவ்விடயத்தே 'அழலுண் பொருள்களினுண்பவை முக்கூறதின் முதற்கூறணியென்பு நடுக்கூறது மச்சைக்கணியாகு, மெழில்கொண்ட கடைக்கூறது வக்காயெழுமென்றே யியனுன்மறையந்தங்க ளிசைக்கின்றனவாமே என்பன முதலிய பல பிரமாணங்களிருத்தலினுனும் இவர் அடாதெனவுடன்பாடே யெமக்காம்.

3-வதேல், வாயுவின் விகாரமாயிருத்தலினுனும், உள்ளிலும் வெளியிலும் போக்குவரத்துடைத்தாயிருத்தலினுனும், சடமாயிருத்தலினுனும், பரதந்திரமாயிருத்தலினுனும, இஃதொப்பவின்னுமளவிலா மாசுற்றிருப்பதானும் பிரமமோ அங்ஙனமன்று தலினுனும், இதுபற்றி, ' ஊசுமுடலினுழல் கின்றகாற்றையுணர் வென்பரே, யேசுமுறக்கத் தியங்கியுமிங்கறி வேதுமற்று, வீசும்பிராணனே யான்மாவலவென்று வேதஞ்சொல்லும், பேசுமனிதர் பொருளறியாமற் பிதற்று

வரே'' 'உண்ணும் புனன்மூக்கூறதின் முதற் கூறுவர் நீரா முகிரந்நடுவிற் கூறுகடைக்கூறு பிராண, னெண்ணும் மிந்திரிக்கூறவை நீயாயிடினன்றோ விறுகின்ற பிராணன்னதா நீயாகுவை யிசையே' பிராணனுமல்ல தாஞ்சி லுணர்வின்மையாலம் துணரும் புலன்களொ ழிவாற், பிராணன தென்னின்மன்னே யொழியாது சேனைநகர்சூழ்வலஞ்செய் பொழுதே.' 'கரணமொடு ங்கவாயுநிகழ் வென்கொலென்னினுடல் காவலாகுமல தேன், மரணமடைந்ததெனறு தமர்சுட்டிடா முன் வளைவாயின் ஞாளிகொளுமே.' இவைபோன்ற அள விறந்த மானங்களுளவாதலினுனும் அடாதெனநூக் கமலமக்கிட்டமேயாம்

4-வதேல், இவ்விந்திரியங்க ளற்பக்கிராககங்களாய், துக்கதாயிகளாய், வாயில்களாய், சடங்களாய்ப் பரிச் சின்னங்களாய், அற்பத்தானங்களை யாசிரயத்திருப்ப னவாதியாய், அநேக அகுஞலங்கிருத மாயிருத்தலி னுனும் பிரமம் அங்ஙனமன்றுதலினுனும், இவைபற்றி விழியைப்புமானென்னில் ரவியாதியாலே விளங்கின்ற தல்லால் விளங்காமையாலே, யொழியப் படுங்கன்ன முதனுழன்ற னுருக்கண்ட கண்டன்னே யொப்பாக வுன்னே.' என்பனவாய அனந்த அளவைகணிறைய விருத்தலினுனும் இவர் நிடேதித்த தெமக்கிட்டமே யாம்.

5-வதேல், சங்கற்ப விகற்பங்களோடு கூடியிருத்தலினாலும், சந்ததம் சஞ்சலான்மகமாயிருத்தலினாலும், மகாதுக்கத்திற் கேதுவாயிருத்தலினாலும், சடமாதலினாலும், பூதகாரியமாயிருத்தலினாலும் பிரமம் அங்ஙனமன்றாதலினாலும், இனமுறவெண்ணவுள்ள கரணத்திலொன்றிதெனலாலிதென்ன தெனலான், மனமுனமன்ன மென்றவதனாலுமல்ல மதியல்ல வந்தவகையே'. தனக்கு மனது சலித்ததென்றே செசல்லித் தானிருந்து, முனக்கு விசாரமுண்டாயிற் சொல்லென்றிங்கு வந்து நின்று, மெனக்கிங்கறிய வொண்ணாதென்று சொல்கின்ற வேழைகடா, நினைக்கத் தனக்கறிவில்லா மனத்தை நிலையென்பதேத, என்பன முதலிய பல பிரமாணங்களிலது விடயத்தையிருப்பதினாலும் இவர் கூறிய தியாவர்தாமொப்பார்.

6-வதேல், மதியேசர்வசம்சாரத்திற்கும் ஏதுவாயிருத்தலினாலும், அகமிதமாதி அநந்த விசேஷணவிசிஷ்டபரிணாம ஹேதுவாயிருத்தலினாலும், மகாராகத்வேஷாதி துர்க்குணங்களாலலங்கிருத மாற்றப்பெற்றுண்மையானும், பரதந்திரமாய், சடமாய், அநித்தியமாய்ப் பரிச்சின்னமாதி அநந்ததோடங்களுற்றிருத்தலினாலும் பிரமம் அங்ஙனமன்றாதலினாலும், அங்ஙனமே " இணங்குநவகுணமெய்து மிப்புத்தியையின்று புத்தர், வணங்கும் விஞ்ஞானமயம் பொருளென்றுமதியின்மைபோற் பிணங்கு நிலைவிட்டுக் கோரப்

மறையின்றி பின்னமறக், குணங்குறியின்றி யிருக்கு மாண்மாவென்று கூறிடுமே'. என்பனவாதி பலவாய அளவைகளிது பற்றியுளவாதலினானும் அடாதெனவிவர் மறுத்தலை யடாதென்பார் யாரே.

7-வதேல், அநேகவித சமஸ்காரங்கட்கு மெழுகுண்டை போலாசிரயமாயிருத்தலினானும், பூதவிகாரமாய், சடமாய், துக்கவேதுவாய அநேகவித குணங்களோடு கூடியிருத்தலினானும் பிரமம் அங்ஙனமன்றாதலினானும், அவ்விதமே "ஐயப்படலோர் பொருணிச்சயமாயறியப்படல் யானென தென்றுமதஞ், செய்யப்படல் செய்வது சிந்தையாஞ் சித்தம் மதுவென்றென நீ தெளியே'. என்பனவாதியாய பல பிரமாணங்களிது பற்றியுளவாதலினானும் இவரேலாதமெதன்பதையாவரே யெள்ளாநிற்பர்.

8-வதேல், சர்வசம்சார துக்கத்திற்கும் பீஜமாயிருத்தலினானும், பிடித்ததுபிடித்துக் காதும் பேதமையாதிகட் கடியாயிருத்தலினானும், இதன் விசிஷ்டமாயே சர்வாத்தியாசங்களு முண்டாயிருத்தலினானும், பூதகாரியமாய், சடமாய அனந்தவித துஷ்டத்வகுஷிதமாயிருத்தலினானும் பிரமம் அங்ஙனமன்றாதலினானும், அன்னணமே இதுபற்றி, 'இடரின் புளதாய் நிலையற்றவிவற் றெண்ணுங் கரணங்களிலாயெவரு, மடரும்பிறவிக்கடி யென்றுணரு மகங்காரமு

நீயலவென்றறிமே ; ஆபத்துக்கெல்லா நிலயமகித்த மவசமவிவேகம், பாபத்துக்கு முதன்மடமைபவித் தழிவைப்பற்றியது, தாபத்துக்கோரிடமானதக விலகங்காரந்தன்னை, நீபற்றில்லாவறிவாலே நீக்கிலதுவே நிமலநிலே ; என்பனவாதி பல பிரமாணங்களிருத்தலி னுனும் இவர் வேண்டாமென்ற விதனைத்தூண்டிமறுப்பாரிலே யென்க.

9வதேல், சர்வசம்சாரத்திியாசங்கட்கும் காரணமாயிருத்தலினுனும், சடமாயிருத்தலினுனும், துக்கவேதுவாயிருத்தலினுனும், இனிக்கூறும் மாயா அம்சமாய் அம்மாயைக்குறுதலும் அநிர்வசநீய விலக்கணத்தோடு கூடியிருத்தலினுனும், பிரியமோதப்பிரமோதரூபமாயுள்ள ஆனந்தமயகோச வடிவமாயிருத்தலினுனும், அக்கோசவடிவமாய, அநேகவிதமோ காஸ்பதமாயிருத்தலினுனும் பிரபம் அங்ஙனமன்றுதலினுனும் ; அன்னணமே 'அறியாப்பொருள் காரணமாயை குறித்தறியும்பொருள் காரியமாமுலகிந், நெறிபாற்றிகழ்நான் மறைபக்தமெலா நீயன்றெனவோது நிரந்தரமே; அறியும் பொருளன்றறியாப் பொருளன்றறிவாகிய நீயெனுமப் பொருளான், பொறிபின் வழிநின்றறியும் பொருளோ போதக்கண் விழித்தறியும் பொருளே; சேருஞ் சுகம் பொருளென்றனை துக்கஞ்செறியும் பொழு, தாருஞ் சுகதுக்கிபாகியிருநிலேபன்றிமறை,

தேருநிரதிசயானந்தமே சிதைவற்ற பொருள், கூரு நிலையடியாரழி சுகங்கொள்ளுவதே" என்பனவாதியபலபிரமாணங்கள் இதுபற்றியுண்மையானும் இவர் ஒவ்வாதென்றுரைவதை யாவரே தண்டங் கொண்டு தடுப்பார். சீவவிகற்பப் ஈண்டுதொடுத் தொழிக்காததென்னை கொல்லோவெனக் கடாவின்? உபாதியினாலன்றிச் சீவத்வமின்மையினானும், உபாதியில்வழிச் சிவமாயே திகழ்தலினானும், அதன் பொருட்டனந்தம் பிரமாணங்கள் சாட்டியிருத்தலினானும், மேற்கூறும் யுத்திகளாற் பொருந்தக் காணவிருத்தலினானும், 12-வது, விகற்பத்தே வைத்தேமாதலின் அக்கடாவெக்கடாவென மறுக்க.

10-வதேல், சடங்களாய், தூலசூக்கும தேகாதிகட்குக் காரணங்களாய், அஞ்ஞான்மாக்களாய், நைசுவரங்களாய், திருசியங்களாய், பரிச்சின்னமே முதலாய அனந்தவித துர்த்தர்ம சம்யுக்தங்களாயிருத்தலினானும் பிரமம் அங்ஙனமன்றாதலினானும், அவ்வணமே, "பூதநீயிலை, என்னுடைய புந்தியினாலெண்ணினேனானிச்சகனானல்ல, நானுவானசகமல்லேனசங்கல் புல்லுபண்மரங்க டானுய்ப் புறம்பாயசேதனமாஞ்சகநானென்னத்தக்கதுவோ, என்பன வாதியவாய பல பிரமாணங்கள் இது விடயத்தே உளவாதலினானும் இவர் அன்றென்னுமிலைதையாமென்ப ரென்றுமின்றும்.

11-வதேல், யாது விசாரிக்கின் அநிர்வசநீயமாயிருக்கின்றதோ அஃதேமாயையாம் யாங்ஙனங்கொலோ வெனினிங்ஙனமாம்: அஞ்ஞானம் அவித்தை மாயை பிரகிருதி, சத்தி, என்பன ஒருபொருட்சொற்களாம்; இத்தகையது சேதனத்தோடு பின்னமா? அபின்னமா? உபயமா வெனின்? நுதலுதும் "ஈண்டு நாநா அற்பமுமில்லை" என்பது முதலிய சுருதிவசனத்தால் சேதனத்தோடுபின்னமென்பது நிடேதிக்கப்படுகின்றது. சடசேதனங்கட்கபேதமேலாமையின் அபின்னமென்பதுங்கூடாது. உபயதன்மங்களும் பரஸ்பரப்பகைத்தலின், பின்னாபின்னமென்பதுங் கூடாது. அங்ஙனமே அத்வைதட்பிரதி பாதகசுருதிவிரோதத்தால் அஞ்ஞானத்திற்குச் சத்ரூபத்தன்மைகூடாது பிரபஞ்சத்தின் காரணத்தன்மைகூடாமையின், துச்சத்துவரூப அசத்ரூபத்தன்மைகூடாது பரஸ்பரம்விரோதிதன்மங்கள் ஒன்றன்கட்சம்பவியாமையின், சதசத்தென்னல் கூடாது அவ்வண்ணமே அஞ்ஞானத்தைச் சாவயவமென்றுடன்படில் திரவ்யாரம்பக உபாதானமேனும், திரவ்யபரிணாம உபாதானமேனும் அவயவமாகலாம். அவயவம் உபாதானமெனினோ சத்தோடாதாணவின் அச்சத்தத்திற்கவயவமாம் அஃதொன்றேறுதத் தங்குணக்கிரியைகட்குபாதானமானசடடடாதிகளும் அவற்றினவயவமாதலின்றேநேரும் ஆதலால் திரவியபதமாவசியகமெனத்தெளிக அவயவத்தினின்றஞ்சன

ணியமானதைச்சாவயவமெனலாம்; அவித்தை திரவிய மாயினன்றே அங்ஙனமேனும் அஃதேக அசம்பாவித மாம், யாங்ஙனங்கொலோவெனின்? இங்ஙனமாம்:-நித்யா நித்யபேதத்தானேயஃதிருவகைத்தாம் அதனைமுதலதென்னின் சாவயவத்வமசங்கதமாம் அன்றியும் ஞானத்தாலழிவுபாட்டையு மெய்தாது நிர்மோக்ஷப்பிரசங்கமாய்ச்சிரவணாதியாவும் பயனில் கூற்றைமருவும் அதனையிறுதியதென்னினோ! அதனதவயவமும் ஆன்மபின்னத்தன்மையானே யநித்தியமாம். அதனதவயவமுமநித்தியமென அனவஸ்தை வாராமலேகல்யாங்ஙனமாம் அந்தியாவயவத்தைப் பரமாணுவொப்பநித்தியமெனினோ? அத்வைத மறையொடுமுரணுதலா யாங்ஙனமென்க. பரமாணுப்பிரதானங்கள் நித்தியமெனன் மறைமுரணெனவறிக; இன்னணநுதலியவாற்றால்சாவயவத்வஞ்சம்பவியாமைகாண்க; அவ்வண்ணமே உபாதானத்வாபாவத்தால் அஞ்ஞானம் நிரவயவமென்னலேலாதாம் சாவயவமேயன்னணமாதலின் ஒலிக்குபாதானவிண்நிரவயவநித்திய மென்னல் ஆன்மாவினின்றுங்கம்பிறந்ததென்னும் சுருதியொடுமுரணும் அன்னணமேதுவியணுக உபாதானபரமாணு நிரவயவமெனலோ நிரவயவங்கட்குச் சையோகங் கூடாமையினானும்சையோகத்தைத்தனதொரு நிலைக்களத்திருக்குமின்மைக்கெதிர்மறையாய அவ்வியாப்பியவிருத்தியென உடன்பட்டிருத்தலினானும் இன்னுமிஃதொப்ப அனந்ததோ

டக்கிரஸ்தமாமெனத்தர்க்கபாதத்த பிரஹ்ம சூத்திரத்தேகண்டித்திருத்தலினலும் ஏலாதெனவறிக; இன்னணமயாதலின பிரபஞ்சோபாதானமாயைக்கு நிரவயவத்வமின்றும் இன்றாகவே உபயவிருத்ததர்மங்கட்கு ஒருநிலைக்களத்தேதலாமையின் சாவயவத்வநிரவயவத்வமுமின்றுமென நவவித அநிர்வசனீயமாமெனச் சம்க்ஷேபமாய்த்தெரிந்துகொள்க.

பிரமமோ இத்தகைத்தன்றாய்ச் சச்சிதானந்தநித்திய பூரணமாயிருத்தலினலும் ஈசுவரோபாதியாயவிது அகஞ்சப்தார்த்தமன்றெனப்பல சுருதிகள் " பூயஸ்ச்சாந்தே விஸ்வமாயா நிவிர்த்தி" "தரத்பவித்யாம்" 'தாதிசோகமாத்மவித்' நூக்கவாயிலாயிபுட் பலானும். தற்பதவாச்சியமாயிருத்தலினுனுமிவர் நுதலியதெமக்குமுடன்பாடே இம்மாயையின் சிற்பிரதானத்தைச் சுத்தமாயை யெனவும் சடப்பிரதானத்தை அசுத்தமாயையெனவும் பாரிபாஷிகமாய்வழங்குவர்பெரியார்.

12-வதேதல், உடன்பாடன்றாமென மறுக்கற்பாலதேயாம் என்னை? அஹஞ்சப்தார்த்தம் பிரமமெனக்கோடின் அகம்பிரமாஸ்மியென அனுசந்திக்கத்தடையென்? அகஞ்சப்தார்த்தமன்றெனின்? மற்றியாது கொலவ்வகஞ்சப்தார்த்தம்? சீவனெனின்? அதனிலக்கணமியாதோ? சித்தெனின்? அந்தச் சிற்பிரமம் யாமென்பதில்யாது தான்றடையோ! இவன்காட்டுஞ் சித்துக்

காணுஞ்சித்து முதலனவாய விகற்பங்கள் நம்வயோ விருத்தர் கடாவாய் பொறிப்பின் விடையுஞ்ஞான்றி றுப்பாம் சீவன் விபுவென்றன்முதலன முதற் பாகத் தேகண்டித் துபதேசித்திருப்பதிற் கண்டுதேர்க.

ஆகமத்தும் நீலகண்டபாடியத்துஞ்சிவோகம்பாவனை கூறியிருப்பதையகம்பிரம மெனநாடல்கூடாதென்னு மிவர்தாமெனப்படி யொப்பினர் சிவமகமெனலாம் அகம் சிவமெனல் ஒவ்வாதெனின்? அங்ஙோபரிதாபம் செட் டியார் யாமெனலாம் யாம்செட்டியா ரன்று வல்லம் பர் அகப்படியர் முதல்னவென்னும் அவரையன்றியிவ ரார்; இவரையாரேனுந்நீராரென்னின் என்னியம் புவ ரோமதிமான்களே உய்த்துணருங்கள். சீவன் சிவத் திற் சயலாபேல்சிவோகமெனச்சிந்திக்கலாமா? தானல் லாதவைதத்தானெனச்சிந்தித்தலெத்துணைத் தப்பென் றுஅறிஞர்களேயூகிக்கலாம் அபேதத்தின் பொருட் டென்னின்? சையோகாபேதமேல் பிறிதறிண்ணமாம் தாதாத்மியமெனினும் இரண்டற்சேயுறும் உற்றது பிறியும் டசுகரணமற்றுபதிகரணமுறறு அபேதித்திரு த்தலின் யாதும் தோடமின்றென்றுரையிலோ பசுகர ணம் இவர்க்குநித்தியமாதலின் ஒழிதலேயின்றும். ஒழிந்துபர்ருதிருச்சுமெனில்? இருந்தும் பயனின் மையினிற்தசற்கே டோப்டாய் பேனும் நாநாவிபுக்க ளுங்கூடா இதுபற்றிமுதற்பாகத்தேகண்டு தெளிக. மேலும், அதுசிருட்டித்து அதுவேபுகுந்தது" வென்

னுமறைக்கிழுக்காய்ச்சீவனை அயலாயொப்பலேனுமா? புகுந்தது பிரேரணையின் பொருட்டென்னின்? "இச் சீவவடிவமாய்ப் பிரவேசித்து" என்னும் மறைக்கிழுக் காதலின் அதுதானியாண்டையதெனமறுக்க. மேலும் ஆன்மசப்தவாச்சியம் பிரமமெனக் கொண்டு உயிர யலா? உயிரெனக்கொண்டு பிரமமயலா? உபயபக்ஷத் தினும் அஞ்ஞன்மத்வதோடம் சிரங்கோடலின் ஆகா தெனத்தெரிக; அஞ்ஞமாக்கள் அநித்தியமாதலினெ ன்க. "உலகமுழுது முயிர்பலவும்யானே சிறிதும் வேறில்லை" என்னும் ஸ்ரீ உமாநாயகன் திருவாக்கை யும், "ஊனுயுயிரானுயுலகானுய்" என்னும் திராவிட வேதத்தையும் நம்பியுய்க. மறையோன்யான் யான் மறையோனெனல் போல் சிவமேயான் யானே சிவம் எனச் சிந்தித்தல் யாதொருதீதுமின்றி யெத்தீதையும் ருக்கியின்பமுழுதம் பயக்குமாதலின் மயக்கமின்றி யகம்பிரமமெனச் சிந்திக்கலாமெனத் தெரிக. இது பற்றி விரித்ததுசானும் இதன் கட்கடாநிகழில் விடை தொடுப்பானெதிர் பாரக்கின்றனம். இவ்வண்ணம் துணிந்து கூறுதல் வேதாகமஸ்மிருதிபுராண இதிகா சம் ஆன்றோர்வாய் மொழிபற்றியேயாதலின் எம்மை யிகழ்ந்து துணிந்து கூறுதலிவர்க்கே யிகழ்வன்றி யெமக்கொரு சிறிதுமின்று மென்றுந் தெரிந்து கொள்க.

இது நிற்க; "அதற்கிணங்க ஒன்றுமின்றி நின்றால்

உலகர் அடுத்து வந்து சூழாரென்றோ? அவராலாக வேண்டிய பயன் கைகூடாதென்றோ? விபூதிருத்ராக்ஷதாரிகளாய்ச் சிவகைங்கரியாதிகளு மேற்கொண்டு,'' என்றார். அதற்கிணங்க ஒன்றுமின்றி நின்றால் என்பதாதி ஓகாராந்தமாய்ப்புகன்ற விவர்மொழியால் அகம்பிரம அபரபரிபாய சிவோகசிந்தனை செய்தவிவர் முன்னோர்பாலிக்குற்றம் வாராது நீங்குமா? அங்ஙனமவரன்றெனின்? இவரையிம்மாசுவிடுமா? மேலுமிங்ஙனம் பாவிப்பவர் ஆகாராதியொன்றுஞ் செய்யாதிருப்பவரும் சிவகைங்கரியாதியொன்று மாற்றாதிருப்பவரும் எனஎண்ணிபவிவர் நுண்ணறிவையாவர் தாம் புகழார். இன்றியமையாத காரியம் மகான்கட்கு இச்சையனிச்சை பரேச்சையென்னும் மூவிதநுகர்வினையால் வருமெனவியான்றோர் பாற்சிரவணியாததிவர் துரிதவிசேடத்தாலாயதாம். அப்யாசியனுபவியர்களுடன் என்பவற்றின் பேதங்களையுமவர்கள் நிற்கும் நிலையும் செய்யுங் காரியமுமறியாத விவர்க்கு எத்துணையுரைத்துத் தானென்னும் மகான்களை நிந்திக்குங் கங்கணம் கரம்பூண்டார்க்கு உள்ளதுள்ளபடியிலங்கலருமைத்தன்று இவர்களெல்லாம் சாஸ்திரவழக்காடப்புகுதல் "கிழக்கு மேற்கு அறியாதான் வழக்குப்பேசமுயன்றான்'' என்பதையே யொக்குமென்க. அடுத்து வந்து சூழ்வதையும் அவராலாக வேண்டிய பயனையுமே யிவர்பொருளாய்க் கருதினார்போலும் அங்ஙனம்

சோகம் பாவிப்போர் தேகான்ம புந்தியைத் தியஜித்திருப்பதாற்கனவினும் கருதார். இத்துணையோர்க்கா ஞானத்தின் பெருமையும் ஞானிகள் பெருமையுந் தெரியும். தெரியுமேல் சந்தாஞசிரியர்களாய தங்கள் குரவர்களையும் சுத்தாத்வைதசமய குரவர்களாய எங்களாசிரியர்களையுமேன் நிந்தித்தவராகார். தெரிந்து செய்யிற் பலமுமதிகமென்க.

இதுவிற்கவினி " விபூதிருத்ராக்ஷதாரிகளாய் " என்றனரே அதுவும் " போற்றி நீறணிந்துருத்திரசாதனம் பூண்டிடைடெழுத்துள்ளே சாற்றுநீகுருவாதி மூவுருவையுந் தாழ்ந்திறைஞ்சிவை செய்தான் மாற்றலாம்பிறப்பிறப்பினை நெஞ்சமே யன்றளாடியதாளுந் தோற்றமுள்ளொளிக்குள்ளொளியாயதைத்தொழுது வாழ்தலுமாமே " என்பதே முதல் சூதசங்கிதைபிரமோத்தரகாண்டம் பஸ்மஜாபாலாதியளவிறந்தமானங்களாற்றறிப்பதாலும் மற்றையர்போன்று கும்பிடுகள்ளர் குழைத்திடுகள்ளர் ஆசாரக்கள்ளர் அபிநயக்கள்ளர் யாங்களன்றுதலினும், இவர்தம்மனமையகோசமாத்திரத்துதித்ததேயென மதிமான்கள்மதியாதொழிக, இங்ஙனந்தூலமதியினர் கள்ளஅன்பு என மதிப்பதை நீக்கியாள்வானே, எமது பரமாசிரியராகிய ஸ்ரீ மணிவாசகப் பெருந்தகை சிவத்தோடயிக்கியமுற்றதொப்பவே எமதாசிரியராய ஸ்ரீ வீரசேகர ஞான

தேசிகராகிய ஸ்ரீ திருக்களர் ஆண்டவரும் பண்டித் பாமர சாமானியமாய் யாவருங்காணச் சிவத்தோட யிக்கமடைந்தமை காண்க. இங்ஙனமாகவே மெய்யடியார்களைப் பொய்யடியார்கள் என மருள்வது புண்ணியமன்றன்றாகிக்கற்பாலதாம். இதனானே, "மெய்த் தொண்டர்செல்லு நெறியறியேன் மிக நற்பணிசெய்கைத் தொண்டர்தம்மிலு நற்றிருண்டுவந்திலனுண்பதற்கே பொய்த்தொண்டுபேசிப் புறம்புறமே யுன்னைப் போற்றுகின்ற வித்தொண்டனேன்" என்று, பட்டினத்தடிகளருளிய இலக்கணத்துக்குப் பெரும்பாலும் தாங்களே இலக்கியர்களாய் நின்று" என்னும் பிதற்றுப்பிதற்றுயவாறு காண்க. அன்றியும் "பரோபகாரத்தின் பொருட்டேசத்துக்களின் விபூதிகள்" என்பது மீண்டுணர்தற்பாலதாம்.

மேலும் உணவுடையன்றி வேறு வேண்டாத உத்தமர்கட்குப் பயிக்காதியானே அதன்நிவிருத்தியாக அதன் பொருட்டுப் பொய்வேடம் பூண்டு சிவகயிங்கரியாதிசெய்யத் தொடங்குகின்றனர் என்பதெத்துணை அசம்பாவித மென்பதை விவேகியரேயன்றி யாவருமெளிதினுணர்தலா மென்பதில்லையமின்றும். சிவசின்னத்தைக் கண்ட மாத்திரையானே வணங்கற்குரியவிவர் இங்ஙனம் நிந்திப்பது இவர் கொண்ட கொள்கைக்கு முற்றினுமடாது அடாது நூலாராய்ச்சி யின்மையே

யிதன்காரணமெனலாம். நூலாராய்ச்சியில்லவர் நூலெழுதப்புகுவது அஷ்டதரித்திரன் 32 அறஞ்செய்யநினைந்ததும் மகஞ்செய்ய நினைந்ததுமன்றி வேறெதற்கொப்பாம். இனியடங்கி வாழ்தலே நலம்.

இது நிற்க, இனி "உண்மைநாயன்மார் வழிபாடு முதலிய சற்காரியங்களை அநாதரத்தொதுக்கி" என்றும் புகன்றனரே இதற்கென்ன காரணம் வரைந்தனர்? வழிபாடு முக்கரணத்தாலாம் அதனைத் தங்குரா வராப உண்மை நாயன்மார்மாட்டுப் பிரமவாதியர் புரிய ஒருபொழுதும் பிரமாதமடைந்த தில்லையே அங்ஙனமாக, அருக்கனொளி யந்தன் காணுவாறு போற்காணாராயின் யாமென்செய்வது அவர்புண்ணியமின்மையே ஏதுவாமென்க. இனி "தங்கொள்கையே பிறர்க்கும் போதித்து வளர்த்துவருகின்றனர்" என்கின்றார், தங்கொள்கையானது வேதாகமாதிப் பிரமாணசித்தமாதலின் அதனைப்போதித்தும் வளர்த்தும் வருதல் பரசிவ ஆஞ்ஞையேயன்றி வேறன்றும் அதனாற்றமக்காகவேண்டியபயனுமின்றாமென்க கர்மநிஷ்டனருமைபேரகாலம்பட்டனுக்குத் தெரியாதவாறுபோல அபக்குவிகளாயார்க்குமகான்கள்பெருமையறிதல்மிகவுமருமைத்தன்று நரிவாலால் ஆழியினாழம் பார்த்தலேலுமா. ஆதலின் வேதாகமநெறிமருவும் போதகாசிரியர்கட்குத் தீதேதுமணுகாதெனவும் அங்ஙனம் நினைதலே தீதெனவுந்தெரிந்து கொள்க.

இனி " இவர்கள் நாம்பிரமமென்ற பிரமவிஷ்ணுக்கள் பட்டபாடும்பின்சிவானுக்கிரகத்தாற் சிவலிங்காதிமூர்த்திகளைப்பூஜித்தே அபசாரநீங்கியுய்ந்ததும் பர்வதாகிருதியாகயாவருங்காண விளங்குகின்ற உண்மையை உற்றுநோக்காததென்னையோ? " என்றார் இஃதோரறிவின்மையையன்றோ விலக்கும் என்னை? எவ்விடத்திலவர்கள் நாம்பிரமமென்று வாதாடியதாகப் பொறித்திருக்கின்றதோ அவ்விடத்தையெடுத்துக்காட்டிலர் இனிக்காட்டுவாராயினும் மூலசுலோகத்தேயெடுத்துக்காண்பிக்கவேண்டும் இவர் இத்துணைவரைந்ததால் பிரமவிஷ்ணுக்களின்னகாரணத்தின்பொருட்டு முரணினார்கள் என்பதும் எந்தந்தையாகிய உமாநாயகன் இன்னகாரணத்தின்பொருட்டுப் பர்வதாகிருதியானாரென்பது மிவரறிந்திலரென்பதை வெள்ளிடைமலைபோற் காண்பித்துக்கொண்டனர் அந்தோ பரிதாபம்! இத்துணையோரெல்லாம் கடிதத்தில்கலத்தைநாட்டலாமா அறியாமல் நாட்டுவது தம்முன்னேரைநிந்தித்து அதற்குறும் பயனையெய்தவேயன்றிவேறன்றாம்.

இதுநிற்க, இன்னமொருவிந்தையைப்பாருங்கள்! பாருங்கள்!! சூத்திரர்கட்கு யாகாதிக்கிரியைகளில் அதிகாரமில்லாததேபோல் தமக்கதிகாரமில்லாததாமெட்டாததுமாயதில் நம்வயோவிருத்தர்பிரவேசிப்ப

தைப்பாருங்கள்! அது தானியாதுகொலோவெனின்? காட்டும் அகம்பிரமவாதிகளாகிய இவர்கள் சிரமேற கொண்டு பாராட்டிவருகின்ற கைவல்லியமுதற்செய்யுளிலேயே சீவசாட்சிமாத்திரமாய் நிற்கும் ஏகநாயகன் பதங்கள் "என்பதில்" நிற்கும் என்னும் பெயரெச்சம்நாயகன் என்னும் பெயர்கொண்டு ஜீவசாக்ஷியாகிய நிஷ்கள சிவமே கிருதகாடின்னிய ஞாயமாக "நாயகன்" என்னுஞ்சகளமாய் நிற்பதென்றுண்மை காட்டி, அந்நாயகன் கரசரணாதி அவயவங்களையுடையான் என்பது நன்குவிளங்கப்பதங்கள் " என்றுமேலும் விளக்கியிருப்பதையும்," என்பதாம் இந்நூலையெவ்வாசிரியர் பாலெப்பரம்பரையில் சிசுருஷைவாயிலாய்க்கேட்டிவ்வயோவிருத்தர் தெளிந்தனர்? அன்றியும் சகளநிட்களங்கள் சாதனசாத்தியமாய், ஒப்பியிருத்தலிவர்க்கு நன்கு புலப்படவில்லை யெனின் ஆன்றோர் பாற் பணிந்து கேட்டற்கு யாது தடைகொல்! மேலு மிவர் சீவ சாக்ஷியை நிட்கள சிவமெனக்கூறிய கூற்றால் இவர் கூற்றுக்கூற்றுண்டது அந்தக்கரண விசிஷ்டசிவமே சீவனும் அந்தக்கரண உபகிதசேதனமாயசிவமே சீவசாக்ஷியுமாதலினென்க. எனவே இவர் பசுபதிகட்கு வேறுபாடுரைத்தல் வேறுபாடன்றோவாயது.

இதுநிற்க, அயனரியுருத்திராதியர் போற்றோற்றமொடுக்க மின்மையின். "ஏகம்', எ-ம், அன்றோர்க்

குந்தானிறையாகலின், நாயகன் என்றுங்கூறினர் இவ்வாற்றால், இதுகாரணப்பிரம மென்பது பெற்றாம். மாயாவிசிட்டசைதந்யத்தைக் காரணப்பிரமமென்று கூறியிருக்கின்றனராகலின் அதற்கு, "உள்ளந்தன்னிற்சாட்சிமாத்திரமாய் நிற்கை" அசம்பவமாமே யெனின்? அதுபரமார்த்தமாகச்சுத்தப்பிரமமேயாகலான் சாட்சித்தன்மை அதற்கு அசம்பவமாகாதென்க.

இவ்வாற்றால், இதுதோடமின்றாயினுஞுக "பதங்கள்" என்னுஞ்சத்தம் உபலட்சணமாய் ஆபாதம்ஸ்தகபரியந்தமான மூர்த்திபோதகமாயிருத்தலின் இது சுத்தப்பிரமத்திற்கும், அப்படியே காரணப்பிரமத்திற்கும் பொருந்தாதாகலின் சரீரவிசிஷ்ட சைதந்யங்களான காரியப்பிரமங்களுள்ளே, யாதானுமொன்றைக்கூறலாமேயெனின்? அங்ஙனங்கூறுதற்குச்சதுர்ப்புஜதிரிநேத்திர ஸதண்ட அஷ்டபுஜாதிகளானகாரியப்பிரமங்களின் சின்னங்களுள்ளே, யாதானுமொரு சின்னங்களை யெடுத்து விசேஷித்திருத்தல் வேண்டும் அங்ஙனம் விசேஷியாமல் ஏகநாயகன்பதங்கள் போற்றி" என்றதால், காரியப்பிரமங்களுள், யாதானுமொன்றைக்கூறுதல் பொருந்ாது ஆயின் "பதங்கள்" என்றதுகாரணப்பிரமத்திற்கு அசம்பவமாமேயெனின்? அக்காரணப்பிரமம் ஒரோர்காலையில் பக்தானுக்கிரகார்த்தம் அவர்வேண்டிய அருளுருக்கொண் டாவிர்ப்ப

விக்கும் ஆற்றலுடைத்தானமையின் அதற்குப்பாதங் கூறியது உபசாரமும் அசம்பவமுமாகாது. இதனைப் "புருடனென்றுரைசெயப்படுவது பரிபூரணமாகின்ற, சொருபநின்றவா நிற்கவிங்கருளொடு தோன்றவல்ல வன்றனே யரனுமன்று மாலயனு மன்றெவர்க்குமுள் ளாகியே யாவர்க்குந் தெரிவருஞ்சிவனவனையிங்கொரு ங்கிய சிந்தையார் தெளிவாரே" என்னும் பிரமகீதை யினும், "சாவாதுபிறவாது தனிமுதலாயிருந்தநா னுவா விவ்வுலகுபடுமெழிதுயர் தீர்ப்பதற்காகவேவாது நின்றேயென்மாயையினன் மெய்யேபோலேவாதுபிற ந்திடுவே னுகந்தோறுமுகந்தோறும்" என்னும் பக வற்கீதையினும், துயரில்சுடரொளிதன்னுடைச்சோ திநின்றவண்ண நிற்கவே துயரின்மலியும் மனிதப்பிற வியிற்றோன்றிக்கண்காணவந்து துயரங்கள் செய்து தன்றெய்வநிலையுலகிற்புகவுய்க்கும்மான் றுயரமில்சீர்க் கண்ணன்மாயன்புகழ்துற்றேனோர் துன்பமிலனே" என் னுந்திருவாய்மொழியினும், தன்பராபரமதானதிரு வேணிநிலையிற்சலனமின்றிபொருதன்மையினின்றரு ளியே, யன்பரானவர்கணெஞ்சினிலுவந்தவடிவாயங் குவந்தவர்களுய்யும் வகைசெய்தவருளும்" என்னும் அஞ்ஞவதைப் பரணியினும் அறிக. இதுசிஞ்ஞா சையுடையோர் உபாசிக்கத்தக்கது காரணப்பிரமமே யென்னும் சாஸ்திரார்த்தத்தைத்தனதுஒழுக்கத்தால் உபதேசித்ததாம் என ஏகநாயகன்பதங்கள் போற்றி

யென்பதற்கு எங்களாசிரியமார்களால் விஸ்தாரமாய் இவ்வண்ணமுபதேசித்திருத்தலினானும் யாங்களுமிவ் வண்ணமே யனுஷ்டித்து வருதலினானும் இதுவிடய மெங்களுக்குத்தெரியாததுபோலவும் இவர் எங்களுக் குத்தெரிவிப்பதுபோலவும் இவர்மனப்பாற் குடிப்பது பாதிரிமார்கள் கடவுணிலைமையைத் தாங்கள் பூரண மாயறிந்ததுபோலவும் இந்துக்களறியாரெனநினைந்து உபதேசிப்பதுபோலவுமாம். நிஷ்களத்திற்றாழ்ந்தது சகளமெனக்கூறாநின்றனர் அத்வைதிகள் என அடிக் கடி கூத்தாடுகின்றனரே யார் இவர்பாலுற்றிங்ஙனங் கூறுகின்றார், இவராக ஏதோ சிற்சில வேதாந்த கிரந் தங்களைக் குருவின்றித் தான்றோன்றித் தம்பிரானாய் முன்பின்முரணுறவோதி அவற்றிலேதோதெளிந்தது போலவோ அல்லது தன்போன்றார்பாற் கேட்டோ மருண்டோ மற்றெக் காரணத்தானோ இவர்மாத்திர மாய் யாங்கள் புகல்வதுபோற்கனாக்கண்டு புலம்பினால் விவேகநாவுற்றுத்தான் றீரும். தாழ்புமுயர்வும் விவே கிகள் கூறுவரா? கூறுவரேல் விவேகமெவ்விவேக மென மறுக்கற்பாலதே யாமென்க.

இது நிற்க, இனியிவரும் இவர்போன்ற நடுநாடரு முய்யும் வண்ணம் சிறிது பிரசங்கத்தாற் பொறிப் பாம்:— ஸ்ரீ வியாசபகவான் ஒருவரேஸ்காந்தாதியில் சிவனுக்குச் சுதந்தரத்துவ முதலிய ஈசுரத்தன்மங்

கூறினர். அந்நியதேவர்க்குச் சிவகிருபையினால் சர்வ விபூதியின் பிராப்தி கூறி அதனால் சிவதன்மங் கூறினார் அங்ஙனமே மற்றைய புராணங்களில் விஷ்ணுவாதிகட்கு ஈசுரத் தன்மை கூறினர் இவ்வாற்றால் ஸ்ரீ வியாசருடைய வாக்கியங்களில் முரணுறுகின்றதே யெனின்? நுதலுதும், சர்வமும் ஈசுரனே, எந்தப்பிரகரணத்தில் அந்நிய தெய்வத்தினிந்தை கூறியிருக்கிறதோ அந்நிந்தை அதனுபாசனாத் தியாகத்தின் பொருட்டன்று, அன்னணம் ஸ்ரீ வாதராயணர் கருத்துமின்றாம்; மற்றென்னை கொலோவெனின்? வைணவ புராணங்களில் சிவன் முதலியோர் நிந்தையும் விஷ்ணுவின்றுதியும் விஷ்ணுவின் உபாசனையில் பிரவிர்த்தித்தற்கேதுவாயிருக்கின்றது. அவ்வண்ணமே சிவபுராணங்களில் விஷ்ணுவாதிகளின் நிந்தையும், அவர்களினுபாசனாத்தியாகத்தின் பொருட்டாகாமல் சிவனுடைய உபாசனையில் பிரவர்த்தித்தற்கே ஏதுவாம். ஒரு பிரகரணத்தில் அந்நியத்தினுடைய நிந்தை தியாகத்தின் பொருட்டேயாமாயின், சர்வதெய்வங்களினுடைய உபாசனைகளுமன்னோ தியாகமாகும்; அதனால் அந்நியத்தின் நிந்தை ஒன்றன் ஸ்துதியின் பொருட்டாகவேயுளதாம் தியாகத்தின்பொருட்டன்றாம். மறையிலக்கினி ஹோத்திரத்திற்கு இரண்டு காலங் கூறியிருக்கின்றது; ஒன்று சூரியோதயத்திற்குப் பிரதமம்; மற்றொன்று சூரியோதயத்திற் கநந்தரகாலம் ஆண்டு,

உதயகாலத்தின் பிரசங்கத்தில் அநுதயகாலத்தை நிந்தித் திருக்கின்றது. அநுதயகாலத்தின் பிரசங்கத்தில் உதயகாலத்தை நிந்தித திருக்கின்றது; அந்நிந்தையின்முற் பரியம் தியாகத்திலாமாயின், இரண்டுகாலத்திலும் ஓமத்தின்றியாகமாம் நித்தியகர்மத்தின் றியாகங்கூடுமோ? ஆகலின், உதயகாலத்தைத் துதித்தற்பொருட்டு அநுதய காலத்தையும், அநுதயகாலத்தைத் துதித்தற் பொருட்டு உதயகாலத்தையும் நிந்தித்திருக்கின்றது; அவ்வண்ணம் ஒருதேவதையின் உபாசனையின் பிரசங்கத்தில் அந்நியத்தின் நிந்தை ஒன்றன் றுதியில் தாற்பரியமாம் அந்நியத்தினிந்தையிலன்றென்றறிக. புராணவாக்கியங்களில் விரோத சங்கைக்கு முக்கிய சமாதானம் யாதெனில்? விஷ்ணு சிவாதிநாமங்கள் எத்துணை ஒவ்வொன்றற் குண்டோ அவையாவுங் காரணப் பிரமத்தி னுமங்களேயாம். காரியத்திற்கும் பொருந்தும். என்னை? மாயாவிசிட்ட காரணத்தைப் பிரமமென்பார் இரணிய கருப்பரான காரியத்தையும் பிரமமென்பராதலின் விஷ்ணுசிவாதிபதங்கள் காரணகாரியப் பிரமங்களை உணர்த்தலி னியாதுங் கோதின் றெண்றுணர்க மேற்கூறியபதங்களின் பரியாயங்களு மத்தகைத்தே, பிரசங்கத்திற் கேற்பவுணர்த்து மெனவுணர்க. சைந்தவபதம் போஜனகமனப் பிரசங்கங்களில் இலவணத்தையும் அசுவத்தையு முணர்த்தல் போலுமாம் இன்னண

மாகவே, வைஷ்ணவ புராணத்தே விஷ்ணுவாதிபதங்கள் காரணத்தையும் சிவகணேசாதிபதங்கள் காரியத்தையும் உணர்த்துமாதலின் வைஷ்ணவ புராணத்திலுள்ள விஷ்ணுவின்றுதிக்கும், சிவன்முதலியோர் நிந்தைக்கும் ஸ்ரீ வியாசாபிப்பிராயம் காரணமுபாசிக்கத் தக்கது காரியங்கள் உபாசிக்கத் தக்கனவல்ல வென்பதாம். அன்னணமே சைவபுராணத்தின் மாட்டுள்ள சிவாதிபதங்கள் காரணத்தையும் விஷ்ணுவாதிபதங்கள் காரியத்தையும் உணர்த்தும் ஆண்டுமேற் கூறியவாறே காண்பதன்றிக் கணேசபுராணாதிகளினும் இந்நெறியேகடைப்பிடிக்க யாண்டுங் காரணங் கொள்ளத் தக்கனவாய்க் காரியங்கள் எள்ளத்தக்கனவா யிருத்தலின் எல்லாப்புராணங்களூடும் காரணமே யுபாசிக்கத் தக்கதெனத் தெரிதற்பாலதவசியமா மென்க.

காரியத்தாலே காரணமெய்தும் இவ்வுண்மை திருவாய் மொழியினும், "உணர்ந்துணர்ந் திழிந்த கன்றுயர்ந்துரு வியந்தவின்நிலைமை, யுணர்ந்துணர்ந்துணரினுமிறைநிலை யுணர்வரிதுயிர்கா, ளுணர்ந்துணர்ந்துரைத்துரைத் தரியயனர னென்னு மிவரை, யுணர்ந்துணர்ந்துரைத்துரைத்திறைஞ்சு மின்மனப் பட்ட தொன்றே. என்றும், "ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினுணின்ற, நன்றெழில் நாரணனான்முகனர னெனுமிவ்வை, ஒன்றநும் மனத்துவைத்துள்ளிநு மிருபசையறுத்து, நன்றென நலஞ்செய்வதவனிடை நம்முடை

நாளே" என்றும் அருளிச்செய்திருப்பது காண்க. ஜகத்காரணன், சத்தியகாமன், சத்திய சங்கற்பன், சர்வஞ்ஞன், சுதந்தரன், சர்வப்பிரேரசன், கிருபாலு, என்றிவ்வாறு ஈசுரத்தன்மைகளைச் சிந்திப்பாயாக வென்று காரணப்பிரமத்தின் உபாசனை கூறியிருக்கின்றது. காரணப்பிரமமின்றி வேறே அநேக மூர்த்திகளும் சாஸ்திரங்களிற் கூறியுள்ளன. அவையெல்லாம் உபாசனையின் நிமித்தமன்று சகலமும் காரணப்பிரமத்தின் உபலக்ஷணமாகவே கூறியிருக்கின்றன.

'மந்தப் பிரஞ்ஞையுடையோர் சாஸ்திராபிப்பிராயமறியாமல் அவ்வவ் வாகாரங்களில் ஆக்கிரகஞ் செய்கின்றதுமன்றி "சியாலசாரமேய" நியாயத்தால் பரஸ்பரங்கலகமும் விளைக்கின்றனர். "சியாலன்" என்பது தன் மனைவியின் தமையனும் "சாரமேயம்" என்பது, நாயாம். "நியாயம் என்பது, திருட்டாந்தமாம். மனைவியினுடைய தமையனுக்கும், அவள் கணவன் வீட்டிற் கடுத்த வீட்டு நாய்க்கும் உற்பாலகன் என்று பெயர் இருந்தன. அந்தஸ்திரீயின் தமையனுடைய சத்துருவுக்கும், அவள் கணவன் வீட்டு நாய்க்கும் தாவகன் என்று பெயரிருந்தன; இப்படி யிருக்க, அந்த ஸ்திரீயானவள் பிரதமத்திற் கணவன் வீட்டுக்குவந்தாள்; அப்போது மேற்கூறிய இரண்டுநாய்களும் ஒன்றோடொன்று சண்டைசெய்துகொண்டிருந்தன; அதைக்கண்ட அவளுடைய கண

வன் அடுத்த வீட்டு நாயாகிய உத்பாலகனைப்பன்றி, கழுதை, என்பன முதலிய வார்த்தைகளால்வைது, தனதுவைத்தாவகனைப் போற்கிடையாதென்று பெருமைப்படுத்திக் கொண்டாடினன்; அதைக்கேட்ட அந்தஸ்திரீக்குத் தன் தமையனை வைகிறதாகவும்,தமையனுடைய சத்துருவைக் கொண்டாடுகிறதாகவும்பிராந்தியுண்டாகி அதனல் மிகுந்த துக்கமுடையவளாய்த் தன் பர்த்தாவோடு கிலேசித்திருந்தாள். நாயகன் அபிப்பிராயமறியாமல் சமான நாமத்தாலே பிராந்திகொண்டு அவள் எப்படிக் கிலேசித்திருந்தாளோ, அப்படியே வைணவகிரந்தங்களில் சிவன் முதலிய நாமங்களால் காரியப்பிரமங்களை நிந்தைசெய்திருப்பதைக்கண்ட சைவர் முதலியோர்களும், சைவகிரந்தங்களில் விஷ்ணு நாமத்தால் காரிய பிரமத்தை நிந்தைசெய்திருப்பதைக்கண்ட வைணவர்களும் துக்கத்தையடைகின்றனர். காரணப்பிரமம் உபாசிக்கத்தக்கது, காரியப்பிரமங்கள் விடத்தக்கனவென்பதே சகலபுராணங்களின் அபிப்பிராயமாம்.மாயாவிசிட்டசேதனம்காரணப்பிரமமென்றும்,மாயையினற் பண்ணப்பட்டகாரியவிசிட்டசேதனம் காரியப்பிரமமென்றுஞ் சொல்லப்படும் பாரத வியாக்கியானத்தின் ஆரம்பத்தில் அறிஞர் சிகாமணியாகிய நீலகண்டபண்டித ராலிவ்வாறெழுதப்பட்டிருக்கிறது. சகல சுருதி சிகரங்களின் சித்தாந்தமுமிதுவே. பிரசங்கத்தாலுபதேசித்ததுசாலும்,

இத்தகைய விடயங்கள் வெளிப்போதற்கே இக்கடா விடுத்தார்போலும், இனியேனும் படித்துணர்வாராக, கிருதகாடின்னிய ஞாயமாகவென்பதற்கு முன்பேகண்டனம் வரைந்திருத்தலின் ஆண்டு கண்டுய்க.

இதுநிற்க இனி "இரண்டாவது செய்யுள், ஈன்றளித்தளிக்குஞ் செய்கைக்கே துவாமயனுப் மாலாய் ஆன்ற வீசனுமாய்த் தானேயநந்த மூர்த்தியுமாய் நிற்கும், மூன்றமுத்தனுமாயின் பப்புணரியாதவனுப் நாளும், தோன்றிய விமலயோத சொரூபத்தைப் பணிகின்றேனே" என்று. பின்னும் விளக்கியிருப்பதையும், என்றார். "அயனுப்மாலாயான்ற வீசனுமாய்" என்றது காரியப்பிரமங்களை "மூன்றமுத்தனுமாய்" என்றது காரணப்பிரமத்தை இவ்விரண்டற்கு மயலற்ற ஆன்மஸ்வரூபத்தையீண்டு வணங்கிய தாம், ஆன்மசட்தம் பெரும்பான்மையும்பிரஹ்மவாசகமும் சிறுபான்மையே சீவவாசகமாமென்க. அன்றியினே "ஆன்மாவினின்று மாகாசம் உண்டாயிற்று" "ஈதனைத்துமான்மாவே" என்பதாதி மறைகளோடு முரணேதரும் அன்றியும் "தன்மாத்திரமா மான்மாவென்றுரைக்கு நாமத்தினையுடையான், றன்மாத்திரமே யாகிய வத்தன்மையான சங்கரன்றான்" என்னும் சூதசங்கிதையோடு முரணவன்றே தேரும். இவ்வுண்மைகளொன்றுமறியாது இச்செய்யுளின் பொருளையேதோ தாம் கண்டு விட்டது போலும் அத்வைதிகள் படித்து

மறிந்திலர் போலுந்தீட்டி விட்டனர்; மேலும் இக்க விகளிவர்க்குப்பிரமாணமாயின் சுருதி சிகரசித்தமாய், "எவருடையருளால் யானே யெங்குமாம்பிரம மென் பால், கவருடைப்புவன மெல்லாங் கற்பிதமென்ற றிந்து" என்னுமிது முதலியன பிரமாணமாகாமற் போயதென்னையோ? அறிஞரே கேண்மின்.

இனி "பத்தியாற் குரவன் பதம்பணிந்திதய பங்க யந்தனை நினைந்ததிலே, நித்தமா யொருவரானினைப்ப ரிதாய் நிமலமாயெங்கணுநிறைந்து சுத்தமாய்ச்சாந்த மாயனைத்துலகுந்தோன்றுதற்கியோனியாய்ச் சொபா வசித்தமாய முதாயநுவமா யொன்றாய்ச்சிற்சுதாநந்த மாய்ச்சிவமாய். உரியநால்வேதத்தோமெனும் பொரு ளாய் உள்ளதாய் உள்ளவெப்பொருட்குங், கரியதாய் நின்ற வொன்றினைக்காள கண்டமுங்கண்ணொரு மூன் றும் பிரிவிலாமங்கை பாகமுமாகப்பேணு நற்பாவனை பெறுவான், அரியதாயருளினால் வரும் விச்சையத னினா லதனையேயடையும் "என்று கைவல் யோப நிஷத்தாற்பரியங் கூறுகின்றபிரம கீதாவாக்கியங்க ளாலும், நிஷகளமே சகளமென்றும் உள்ளவெப் பொருட்குமென்றதனால், பசுபாசங்களும் அநாதிநித் யமே யென்றும் விளக்கியிருப்பதையும்" என்றார். இதன்கண் நிஷ்களமே சகளமென்பதையும் சாத்திய சாதனங்களென்பதையும் முதற்பாகத்தேகைவல்யோ பநிடதம் விசாரித்து நிறுவுஞான்றுவிளக்கியிருத்தலி

ணுண்டு கண்டு கொள்க "உள்ளவெப்பொருட்குமென்றதனால் பசுபாசங்களும் அநாதிநித்யமே" என்றனரே அதைச் சற்றுராயுதும். பசுபாசங்கள், அநாதிநித்தியம், உள்ள பொருளாதலின் என்னுமனுமானமிவர் கூற்றுற் சித்தமாம். இதன் கண் அத்வைதிகட்குப் பசு அநாதி நித்தியமெனச் சித்தித்திருத்தலின் அதையே யிவரிவ்வனுமானத்தாற் சித்தஞ் செய்தலின் சித்தசாதனதோடமாம்.

மேலும் யாண்டியாண்டாண்டுள்ளபொருளோவாண்டெல்லாமநாதி நித்தியமிருக்கவேண்டுமெனறு நனுக்கண்ணுள்ள கடபடாதி வியாவகாரிகபதார்த்தங்களுடும் பிராதிபாசிகபதார்த்தங்களாய கயற்றரவுகானனீராதிகளுடும், கனுக்கண்ணுள்ள பிராதிபாசிகபதார்த்தங்களுடும் ஏது விருந்து சாத்தியமின்மையின் வியபிசாரம் வருதலின் அவிநாபாவவடிவவியாப்தி சித்தித்தல் யாண்டையதெனமறுக்க. உள்ளபொருள்களோமூவிதமாய் 1 மூக்காலத்திலுங்கெடாததாம் அதுபசுபதியென்னுமொன்றும், 2 சம்சார தசையிற்றோற்றுவதாம் அது பாசாதி கடாதியந்தமாம், 3 பிரதீதி காலத்தின்மாத்திரம்தோற்றுவதாம் அது கயற்றரவுகானனீர் கந்தர்ப்ப நகரம் கனுக்கரி முதலனவாம். இத்துணைப்பாகுபாடு தெரியாது எல்ல செட்டிலக்க வகலக்க என்பது போன்று உள்ளபொருளென்றால் எல்லாமநாதிநித்தியமென்றே நினைந்து விட்டனர் அந்தோபரி

தாபம் நம் வயோவிருத்தர் அப்பசித்த கல்வி விசேடமே விசேடம் "கருத்த வெல்லாந்தண்ணீர் வெளுத்தவெல்லாம் பால்" என்பவர் போலன்றோ இவருங் கல்வி கற்றுமாயினர். வினைப்பயன் வெல்லயாவரான் முடியும். சகசீவபரங்களை நுங்கள் நூல்கள் மிச்சையெனவோதலி னனுவதித்தேமெனின்? உண்மையே சகமிச்சையாகுக சீவபரங்களின் உபாதியாய்மாயையும் மிச்சையாகுக சீவபரங்களை மிச்சையென அந்நூல் நுதலவில்லையே ஆசிரியர் முகமாயுணர்ந் திருப்பினிவ்வித அனர்த்தமேன் வரும் அதற்குமென்புண்ணியம்வேண்டாமா? "பாக்கியத்தாலேபழமறைமொழிந்திட்ட வாக்கியங் கேட்டோமென்றுந்தீபற" என்றன் றேழுதோரோதியுள்ளார்

அன்றியும் பிரதீதியாகாநின்ற சர்வவஸ்துக்கட்கும் என்னும் பொருளில் உள்ளவெப்பொருட்கு மென்று கவிநாயகர் கூறியதே யன்றிச் சமஸ்கிருத மூலத்தினும் கைவல்யோப நிடதத்தினு மங்ஙனமின்றிச் "சமஸ்தசாக்ஷி" என்றுமாத்திரம் இருக்கின்றதென்த் தெரிந்துகொள்க. கீர்வாணமூலவலிமையின்றித் தமிழின் மாத்திரம் குருமுகமின்றிப் பார்த்தாலிது தானு அனர்த்தம் வரும் இன்னும் வருவதென்னையோ? சிவ் சிவா, சிவசிவா. இத்துணையுரையாசிரியர் இளம்பித் தான் வேதத்தை மறையாக்கி விட்டனர் போலும். இனிவரையு ஞான்றேனும் சற்றுமுன்பின் ஆலோ

சித்து வரைவாராக. நிஷ்களமே சகளமா யாவிர்ப்ப வித்தலினானும் உயர்ந்தது தாழ்ந்ததெனச் செப்பா மையானும் இதுவிஷயமாய் இவர் வரைந்ததிற்குயாம் வரைந்ததே சாலுமாதலினானும் விரிக்காமற் சுருக்கினோம். இனியிவரடிக்கடித் தமதாசிரியரென நினைத்து எடுத்தாளும் சுத்தாத்வைத சைவசிகாமணியாய ஸ்ரீ ஞான சம்பந்தப் பெருந்தகையாதியர் இவர் கூற்றுக் குக் கூற்றா யிருத்தலின் தமது துவிதசைவத்தே நின் றேனு மூய்வாராக.

இத்துடனின்றால் நம் நூலாராய்ச்சி வெளிப்போதா தெனக் கருதி இன்னுஞ்சில வரைதலைக் காண்மினோ காண்மின்:— 'இனி யிவர்கள் கைவல்லியத்திலேயே (உ0) வது செய்யுளில் "தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல்" என்றும் (உக) வது செய் யுளில் "அநாதியாஞ் சீவரெல்லாம்" என்றும் (௩உ) வது செய்யுளில் "எக்குணங்களும் பற்றாதோனிமித்த காரணனுமீசன்" என்றும் வருவன வாதிகளால் பதி பசுபாசங்கள் அநாதி நித்தியமென்பதும், 'ஜகத்துக் குமுதற்காரணம் மாயையே யென்பதும், ஈசன் நிமித் தகாரணனே யென்பதும் தெளிவாயிருக்கப் பிரமம் ஒன்றே நித்தியமென்றும், அந்தநித்திய சித்திலேயே அநித்திய சடங்கள் தோன்றுவன வென்றும் சீவேசுர சகத்துக்கள் அநித்தியமே யென்றும், நித்தியமாகிய பிரமம் நாமே யென்றும் அகம் பிரமங்கூறும் அநி

யாயமென்னையோ ?" என்றார். இதனுள், தன்னையும் (ஆபாசஞான) தன்னையும் — தனக்கு = (ஆபாசஞான) தனக்கு, ஆதாரத்தலைவனையும்=ஆதாரமாகிய கூடஸ்தனையும், கண்டானேல் = ஒருவன் கண்டானாயின். எனக்கூறியதாற்பதி நித்தியமெனச் சித்திக்கச்செய்து சித்த சாதன தோடத்தை யடைந்தனரா ? அல்லதென்பசு நித்தியமெனச் சித்திக்கச் செய்து சித்த சாதன தோடத்தை மருவினரா ? அல்லதென் பாசத்தைத் தான் நித்தியமெனச் சாதித்தனரா ? இந்தப் பாதத்திற் கிவர் பொருடெரிந்திருப்பின் இவர் கொடுத்தே யிரார்; கும்பலில் கோவிந்தம்போடல் போல் பலித்தவரைக்கும் பார்க்க நினைந்தனர் போலும். அறிஞர் கூட்டத்தே இத்திரிபொன்றும் பலியாதெனத் தெரிதலிவர் கடனாகவைத்துக்கொள்க. ஆபாசகூடஸ்தர்கட்குக் காரியகாரணத் தன்மையேனும் ஆதேய வாதாரத் தன்மையேனும் அநாதி நித்தியங்கட்கு ஏதுவாகாதென யாவர் தாமறியாதார். மட்கடங்களின் காரியகாரணத்வமும் ஆதேய ஆதாரத்வமும் மட்டேனும் கடத்திற்கேனும் அநாதி நித்யங்களைச் சாதிக்குமா ? சாதிக்குமெனின் யாவரே இருகை கொட்டி நகையார். சாஸ்திரஞ்ஞர்கள் பேசவேண்டியதை யாவரும் பேசிவிடலாமென்று நினைவது ஆதிசேடன் காரியத்தையும் ஆதித்யன் காரியத்தையும் கிருமியும் மின்மினியுமாற்ற நினைவதை யொக்கும். கலமுங் கர

முங் கருநிறமையும் நலமுடனிருத்தலின் நாடியவெல்லாம் நாட்டிவிடலா மென்று நினைக்கலாமா? கத்திக்கையனெல்லாம் யோத்தா ஆய்விடின் ஆசிரியர் வாயிலாய்த் தனுர் வேதத்தைக் கற்பானேன். ஆதலின் ஆயாது செய்யின் ஓயாது துயராம்.

இது நிற்கவினி "அநுநியாஞ் சீவரெல்லாம்" என்றெடுத்துக் காட்டினரன்றோ இஃதியாதின் பொருட்டோ? சீவர்கட்கநாதி சித்திக்கச் செய்யவென்னின்? யாவருமொப்பி யிருத்தலின் சித்தசாதன தோடத்தோடு கமடரோமாபாவம் சசவிஷாணாபாவம் முதலவற்றைச் சாதிப்பதாலுண்டாம் பயனுமன்றோ வெய்தும். அநுநியேதுவைக் கொண்டு நித்தியஞ் சாதிப்பானெண்ணினுமெனின்? அந்நித்தியமும் சீவர்க்குச் சித்தித்தே யிருத்தலின் மேற்கூறியதோடம் வந்து பற்றுதற் கஞ்சாதென்க. அன்றியும், சீவர், நித்தியர் அநுநியராதலின், என்னுமனுமானமுந் தோடக்கிரஸ்தமாமென்க. என்னை? யாதுயாது அநுநியோ அஃதஃது நித்திய மன்றுமென வன்றோ வியாப்தியாம் ஆகவே சாந்த அநுதியாய முன்னின்மைக்கண் ணவ்வேதுவாய அநுதித்வமிருந்தும் நித்தியத்வம் வாராமையின் வியபிசாரம் யாங்ஙனம் வாராமற்போம். ஏதுப்போலிமேய இவ்வனுமானம் சாதுவாத லியாங்ஙனமென மறுக்கற்பாலதாதலி னெனவுணர்க.

இவ்வெடுத்துக் காட்டானு மிவ்வயோவிருத்தர் பாண்டித்யம் பிரசித்தமாயதாம் "சும்மாவிருக்கின்ற தாரையை ஊதிக்கெடுத்தாளுண்டி" என்பதுபோல இவற்றைக் கையாடாதிருப்பின் மதிப்பாய் இவருமே தோ சிறிது தெரிந்தவராயிருக்கலா மென்று சிந்திக்கலாம் இப்போதோ அதுவுங்கெட்டுத் தங்குட்டும் வெளிப்பட்டு இம்மட்டென மட்டுப்பட்டுப் போயதையறிஞரேகாண்மின். இவ்வயோ விருத்தர் இவ்வளவு கட்டப்பட்டுச் சித்தித்த சித்திரத்தைச் சித்திக்கச்செய்கின்றனரன்றோ? இவர் தம்மேல்யாமே ஒரு குட்டிக்கடாவிடுப்பாம் அதாவது:— நாசமாமுயிர்க்குளென்று ௩௩-வது செய்யுளிலக் கைவல்லியத்திலேயே இருக்கின்றதன்றோ அதற்குப்பொருளென்னென்பதே அழிவுடையதாமுயிரென இவரருத்தங் கோடினோ இவர் பிடித்த பக்ஷத்திற் கானியாவதுடன் இவர் பருவமகிமையும் வெளியாய் விடுமென்றோ இவர் ஆண்பிள்ளையாயிருக்கும் பக்ஷத்தில் இதற்கிவர் விடையிறுக்கவேண்டும்.

இது நிற்கவினி "எக்குணங்களும் பற்றுமேதான் நிமித்தகாரணனு மீசன்" என்பதைக் கொண்டு மாயைக்குச் சகது பானத்தன்மையையும் ஈசுவரனுக்குச் சகந்நிமித்தத் தன்மையையும் சாதிக்கவன்றோ முயன்றார். ஈசுவரனுக்கு நிமித்தகாரணத் தன்மையாமு மொப்பி யிருத்தலின் இவரிப்போ தொன்றுந்

தர்பித்துச் சித்தசாதன தோஷத்தையடைய வேண்டாம். அன்றியும் யாம் விவர்த்த நிமித்தமாய்க் கொண்டிருத்தலின் ஈசுவரன் சர்வவஸ்துக்கட்கும் அதிஷ்டானமா யிருத்தலேனும், இவரோபரிணும நிமித்தமா யொப்பி யிருத்தலின், குடம் நிமித்தகாரணனும் குலாலனுக்கு வேறாயிருப்பதே போல் ஈசுவரனும் சகத்திற்கு வேறாயிருக்கவன்றோ வேண்டும், இருக்கின்ற வஸ்து தேசபரிச்சேசங்களாற் பரிச்சின்னப்பட்டு ஈசுவரன் மாயுமாறன்றோ இவர் இடர்தேடிக் கொண்டார் அந்தோபாபம் ஆத்திகராக ஆசையுமிருக்கின்றத நூல்வழியேயுஞ் செல்லவில்லையா ரென்ன செய்வது. ஆதலின் விவர்த்தநிமித்த மொப்புவதில் யாதொரு சோதமின்றாம். உண்டெனவரையிற் கண்டனங்கைமேல். மாயையை உபாதானமென்கின்றனரன்று பரிணமோபாதானமா? விவர்த்த உபாதானமா ஆதிய தேல் விவர்த்தவாதிகளிடத்தே அச்சொற்சொல்லவே யிடமின்றாம். ஆனு லொப்பிலையாவெனின்? ஒப்பியபடி யிவர் அநிர்வசனீயமாய்ஒப்பிக்கொள்வரா? இதற்கு விடை பகர்வாராக, மாயையைவிவர்த்த உபாதானமெனக்கோடிலுறுந் தீங்கியாதுதான்கொலோவெனின்? நுதலுதும், யாண்டும்சக்தி விவர்த்த உபாதானமாதலைக் கண்டிலமென்று? மட்பாலுள்ள கடசக்திகட காரியத்திற்கு விவர்த்த உபாதானமென்றாய் மண்ணேயங்ஙனமாகின்ற தென்பதை யா

வர் தாமறியாதார் சக்தியங்ஙனமாயின் மண்ணுவ
சியமாய் எக்காரணமுமன்றி நியாய விரோதமுமன்றே
நேரும் அன்றியும் விவர்த்த உபாதானத்திற்கும் கா
ரியத்திற்கும் சமான சத்தையேயின்றாம்.

ஆற்றேற்குடமும் மண்ணும் சம்சாரதசையினு
ண்மையின் சமானசத்தையின்றென்பதி யாங்ஙனங்
கொலோவெனின்? மண்ணிற்குடமென்னுஞ் சொல்
லைத்தவிரப் பொருளின்மையினுனும் இருந்தாற்றனித்
துத் தோற்றவேண்டுதலானும் நிரையின் நியூனதிக்யந்
தோன்ற வேண்டுமாதலினுனும் நாமமாத்திரத்தையும்
கொண்ட வேடத்தையுங் கொண்டு வேறென்னின்
கருப்பனெனப்பெயர் வாய்ந்த நடன் அரிச்சந்திர
ஞய் வேறுகாத காரணமியாதோ? ஆதலின் அபின்ன
நிமித்த உபாதானன் ஈசுவரனேயாம் விவர்த்தமாய
சகத்திற்கென்றுணர்வதுடன் "உலகமுழுது முயிர்
பலவுமியானே சிறிதும் வேறில்லையலகிலறிவாலாய்த்
திடனுமாயாவிடத்து மருத்தமிதே திலகமாயமறை
துணிந்து திகழ்த்தும் பொருளுமிதுவென்றனிலகுந்
தன்மையனுபவமுமிதிலோரைய முளதன்றால்" என
வும் "நானே முழுதுமெனையொழிய நாடிற்சிறிதும்
வேறில்லை" எனவும், எம்மன்னையாயமலைமகள் மண
வாளனே திருவாய் மலர்ந்தருளியிருப்பதையும் சற்று
விசுவாசத்துடனுணர வேண்டிய தவசியபாமெனத்
தெரிந்துகொள்க. நமது கருணைநாயகனுகிய மகா

தேவனே அபின்னநிமித்தோபாதானன் என்பது மறைமுடிப் பொருளென்பதையிவர் தெரிந்து இனி யிவ்வகையாபாசாக்ஷரங்கள் வரையாதிருக்கும் வண்ணம் இவர் மதியினுந் தோற்றுமாறு இருசெய்யுளீவாம் அதாவது:—போற்றிறைமாயாசத்தியோ டொன்றிப்பொலிந்த சிற்பிரதானமதனாற், சாற்றருநிமித்த காரணனாகித் தகுஞ்சடப் பிரதானமதனா, லாற்றுபாதான காரணனெனநின்றாக்கிய புத்தியாதிகளிற், றோற்றுபுசீவரூபமாய் வினையாற் சொற்றபோத்துருவென நின்றே. நியமசத்தியினாற்போக போத்துருவை நியமஞ்செய்து ருத்திரவுருவான், மயமுறுமாயா காரியஞ் சிதைத்து வந்தருளாரியவுருவா, லயர்வுறு சீவன்றன்னையே தன்னோடையிக்க மாக்குவனெனவறிக, வுயர்வுறுசமட்டி வியட்டியென்பனவானு யிரிறைகட்குறும் பேதம்.'' என்று ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளருளிச் செய்திருப்பதே யாம். இனியேனும் நன்காராய்ந்தய்க. இத்துணைகூறலுங் கருணையினாலேயேயாம்.

இனிப் பிரமமொன்றே நித்தியமென்ப தநியாயமென்கின்றாரன்றா யாமாறுதலுகின்றோம் சுருதியே நவில்கின்றதன்றா ;ஆயின் நுப மதப்படியேனும் அநேக சீவர்கள் நித்தியமாயிருப்பதால் அநேக நித்தியங்கள் சித்திக்கின்றனவே அங்ஙனமாக எங்கூற்றுநற் கூற்றன்றாவெனின் ? உண்மையே, நற்கூற்றுதான் ஆயினும் "உபாதிடால்வருபேதபேயிவர் பேதமன்றுருவு

யிரினின் கபாதியாமுடல் போலிறைக் குளகாரணு நி கன்காயமே" எனவும் "இந்தவுடம்புறை சீவபரங்க ளெனப்படுமென்ன மிரண்டுந்த விரண்டிலுமொன்று வினைபயன் அங்குறுகர்ந்திடுமாற் றொந்தமறும் பர மொன்று முணுற செலப்படுபேதமில்வான் வந்த கடத்திலகப்படுபேதமெனப் படுமாயையினால்" எனப் பிரமகீதை முண்டகோபநிடதார்த்த முரைக்குமத்தி யாயத்திலும் "நீயெனும் பொருளேயதென்று நிகழ்த் திடும் பொருளாவதுந்தூயசிற்பரமே பதங்களிரண்டி னுந் துணியாதலான், மாயையென்றும் அவித்தை யென்று முபாதிபேத வழக்கினாலாய கற்பிதபேதமல்ல தபேதமே பொருளாவதே" யென ஷை கைவல்லிய உபநிடதார்த்தமுரைக்கு மத்தியாயத்தினும். "ஓயுமா றறவேயுண்பவன் சீவனூட்டுவான் சிவனிவர் தமக்கிவ், காயபேதந்தானு பாதியால் வந்ததல்ல தபேதமேயா கும்" என ஷை கடவல்லிசுவேதாசுவதர உபநிடதார் த்தமுரைத்த அத்தியாயத்தினும். (இவைஸ்காந்தத் துள்ள சூதசங்கிதையினுள்ள பிரமகீதையினுள்ளன வாதலின் அப்பிரமாணமென நினைக்கினும் நாத்திகத் வம் வந்து சாருமெனத்திரமுறவறிக) "நித்தியமாகு மான்மா ஏகமாய் நிகழ்ந்துமாயாசத்தியா யளப்பில் பேதமாமுறுபேதஞ்சாற்றில் வைத்தநீர்க்குடங்கடோ றுந் தோன்றிடுமதிபம் போல வுத்திடுமுபாதிதன் னாற் பற்பலவு நுவந்தோன்றும்" எனக்கூர்மபுராணம்

சாங்கியயோக முரைத்த அத்தியாயத்தினும் மற்று மனேகவிடங்களினும் அந்தச் சிவபரங்கட்கு உபாதி யானேயே பேதமும் உண்மையிலபேதமு மிருத்தலி னிரண்டேனும் நாநாவேனுமாயது யாங்ஙனமோ. இப் பிரமாணங்களையெல்லாங் கடந்து நிற்கின்ற ஆத்திக கோட்டியிலேயே சேர்த்தல் தகாதென்க.

அற்றேல் இரண்டுமொன்றாயின் ஒன்றெனபதிற்குப் பிரமாணமுண்டு கொலோவெனின்? இன்றெனநாத் திகரன்றோ றைவர் எமக்குப் பிரமாணத்தை விடு த்து வேறுவழியென் னுதலிற்காட்டுதும்:-பிரமகீதை யில் ஐதரேய உபநிடதார்த்த முரைக்கு மத்தியாயம். சின்மாத்திரமாயுள்ள வெறுஞ் சிவனே திகழ்வான் யாதுக்கு முன்மாத்திரமும் வேறில்லை முற்றுமவனே மொழிவுற்ற நன்மாத்திரமா யான்மாவென்றுரைக்கு நாமத்தினையுடையான்றன் மாத்திரமேயாகியவத் தன் மையான் சங்கரன்றான்" எனவும் ஷை சாந்தோக் கியவுபநிடதத்தின் ஆறுமத்தியாய அர்த்தத்தை உரை க்குமத்தியாயம். "உலகமுழுதுமுயிர் பலவுமியானே சிறிதும் வேறில்லை" (இது பரமசிவன்றிருவாக்கிய மெனத்தேர்க) எனவும் ஷை கேனோபநிடதார்த்த முரைக்குமத்தியாயம் "தீதாகநன்றேயாகச் சிவனலா தில்லை" "மெய்ப்பிரமன்றனையொழிய வேறொருமாயை யுமில்லை" "பொருவில் பரானந்த பரிபூரணமெய்ச் சுடராகுந்தெரிவருமா தேவனல்லாற்றி கழ்வதொரு

சிறிதுமில்லை" "இதுவே முடிந்த நிலமெல்லாத் தர்க்கங்களுக்கும் காட்சியே, முதலாம் பிரமாணங்களுக்கு மொழியும் வேதாந்தங்களுக்கும், விதமாம் புராணமனைத்தினுக்கும் மிருதிகளுக்கும் வேதத்தின், மதமாம் விச்சையனைத்தினுக்கும் மன்னுமா பாரதத்திற்கும். ஐயன் சைவாகமங்கட்கும் அரியாகமங்கட்குமெனது பொய்யின்றிய வாகமத்துக்கும் புத்தாகமங்கட்கும் அருகன், செய்யுமாசமத்துக்கும் சித்தரியக்கர் கந்தருவர் உய்யும் பரிசுமற்றுள்ளோருரைத்தவாகமங்கட்கும்" எனமேலே கூட்டியுணர்க. ஷை சந்தோக்கிய உபநிடதத்தின்று மத்தியாய அர்த்தத்தை யுரைக்கு மத்தியாயம். "பேராது விளங்குகின்ற பிரமமே பிறிதொன்றில்லை" "சிவனேயுள்ளான் பிறிதில்லையென்றுநிரமாயறிவதுவே பவமே யொழிக்கும் பரமார்த்தம்" "ஆதரமுடையீர் கேண்மின் அருமறைப்பொருளீதென்றே, யோதலால் உவமையில்லாப் பொருளிதிலையமுண்டேல், தீதறமழுவைக்காய்ச்சிச்செங்கையினிடுவேனென்றான் நாதனு யுலகமெல்லாம் படைக்கும் நான்முகனுயுள்ளோன். பத்தராயுள்ளீர் கேண்மின் பகர்ந்த வேதத்தினர்த்தம் இத்தகைத்தாகும் வேறொன்றில்லை யாமிதனிலுங்கள் சித்த நம்புதலுண்டாகச் செப்பினே மாணைமுன்றோடத்தனுர் பாதந்தொட்டேயென்றனனலரின் மேலோன் அன்பராயுள்ளீர் கேண்மின் அறிவித்த பொருண் மெய்யன்றேல் என்சிர

பிற்று வீழ்வதென்றனன் இதுவுமன்றி, யின்பமேய் ளிக்கு மீசனிவ்விடந்தன்னின் வந்து தன்பெருங்கரு ணையாலுந்தளர்வறப்பண்ணுகின்றான்" எனவும். கூர்ம புராணம் ஈசுரகீதைசாங்கியயோக அத்தியாயம். ஆத லாலெல்லாமாகி நின்றது மறிவே வேறொன்றோ திடக் கண்டதில்லை, எனவுங்காண்க, இத்துணைப் பிரமா ணங் காண்பித்தும் சுருதிகள் காண்பிக்கவில்லையே யெனின்? அளவிறந்தன விருத்தலிற் சிறிது காட்டு தும். யசுர்வேதத்தில் வராகோப நிஷத் 4 வதத்தி யாயம், சிவனேகுரு, சிவனேதேவன், சிவனேவேதம், சிவனேபிரபு, சிவனே நான் சிவனே சகலமும், சிவ னேக்காட்டிலும் அயலொன்றுமில்லை. சர்வசாரோப நிஷத் சஜாதீய விஜாதீயபேதமற்றது சத்தியம். வராக உபநிஷத் 2-வதத்தியாயம் சத்தியமான பரப்பிரமம் நான்; என்னைத்தவிர வேறேயாதொன்றுமில்லை. யசுர் வேதம் கைவல்யோபநிஷத். அவனே சிவன் அவனே இந்திரன் அவனே நாசமில்லாதவன் அவனே விஷ்ணு அவனே பிராணன் அவனே காலம் அவனே அக்கினி அவனே சந்திரன் உண்டாயிருக்கின்றனவும் இனி யுண்டாகப்போகின்றனவுமாகிய எல்லாமவனே சாசு வதமாயுள்ளவனுமவனே அவனையறிந்துமிருத்துவைத் தாண்டுகின்றான். முத்திக்கு வேறுவழியில்லை. என் பன பலவாமெனவுணர்க. ஆயினிதுவிஷயத்தே தமிழ் மறையுண்டுகொலோவெனிற் சிறிதுகாட்டுதும் விரியு

மென்னும்பயத்தால் :—திருவாசகம் நீயலாற்பிறிது மற்றின்மை சென்று சென்றணுவாய்த், தேய்ந்து தேய்ந்தொன்றுந் திருப்பெருந்துறை யுறைசிவனேயொன்று நீயல்லையன்றி யொன்றில்லை. ஏகனனேகனிறைவனடிவாழ்க. அருவமும் உருவமுமானாய் போற்றி. வானாகிமண்ணாகி வளியாகியொளியாகி யூனாகியுயிராகி யுண்மையுமாயின்மையுமாய், விரிந்த ஆகாயம் நீர்நிலம் தீகாலாய் பூதங்களைந்தாகிப் புலனாகிப் பொருளாகிப் பேதங்களனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனை கூறும்நாவே முதலாகக்கூறுங் கரணமெல்லாம் நீ தேறும்வகை நீ திகைப்பு நீ தீமை நன்மை முழுதும் நீ வேறோர் பரிசிங்கொன்றில்லை மெய்ம்மையுன்னைவிரித்துரைக்கின் அட்டமூர்த்தியழகன் என்பனபலவாம். ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம் ஊனாயுயிரானாயுடலானாயுலகானாய் வானாய் நிலனானாய் கடலானாய் மலையானாய் நிலனே நீர்வளி தீ நெடுவானகமாகின்ற புலனே என்பனபலவாம். திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் மாயவன் சேயவன் வெள்ளியவன்விடஞ்சேருமைமிடற்றனையவனாகி யோரந்தரமும் மயனென்று வரையாகந், தீயவனீரவன் பூமியவன்றிரு நாரையூர் தன்னின் மேயவனைத் தொழுவாரவர் மேல் வினையாயின வீடுமே. குற்ற நீ குணங்கள் நீ கூடலாலவாயிலாய் சுற்றம் நீ பிரானும் நீ தொடர்ந்திலங்கு சோதி நீ, கற்றநூற் கருத்தும் நீயருத்த மின்பமென்றிவை,

முற்றும் நீ புகழ்ந்து முன்னுரைப்பதென் முகம்மனே என்பன பலவாம் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் அண்டமாய் ஆதியாய் அருமறையோடைம்பூதப் பிண்டமாய். ஊனை யுலகேழாய் நின்றான்றன்னை. நீதியாய் நிலனாகி நெருப்பாய் நீராய் நிறைகாலாயிவை யிற்றினியமாகிப்பாதியாய் ஒன்றாகியிரண்டாய் மூன்றாய்ப் பரமாணுவாய். ஐம்பெரும் பூதங்களாய். ஓசையொலியெல்லாம் ஆனாய் நீயே எல்லாவுலகமுமானாய் நீயே அல்லாய்ப்பகலானாய் நீயே ஒன்றாயுலகனைத்துமானார் தாமே உருமூன்றாயுணர்வின்கணொன்றானானை மூவன் காண் மூவர்க்கு முதலானான் காண் இருநிலனாய்த் தீயாகி நீருமாகியியமானனாய் எறியுங் காற்றுமாகி யருநிலையதிங்களாய் நாயிறாகியாகாசமாயட்டமூர்த்தியாகிப், பெருநலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும் பிறருருவும் தம்முருவும் தாமேயாகி, நெருநலையாயின்றாகி நாளையாகி நிமிர்புன்சடை யடிகணின்றவாறே. மாலாகி நான் முகனாய் மாபூதமாகி. இப்பொன் நீ இம்மணி நீ யிம்முத்து நீ யிறைவனீயே யேறார்ந்த செல்வன் நீயே என்பன வெண்ணிறந்தனவாம். இதனானே யாதாயிற்று கொலோவெனின்? உணர்த்துதும், "ஆதலாற் பிரமமொன்றே நித்தியமல்லைத்தேரிற், பேதுறத் தோன்றும் நீரிற்பிரபஞ்சம் மருண்டு தோன்றும் தீதுறுமனத்தர்தீய பிரபஞ்சம் பிரமம்வேறென், றோதுவர் ஒக்கநோக்கும் யோகிய

ரொன்றாய்க் காண்பர்'' எனக்கூர்ம புராணத்தோதிய வாறு பிரமமொன்றே நித்தியமெனப் புகலல் நியாயமேயன்றி அநியாயமன்றாம். அன்னணம் அநியாயமிவர்க்குடன்பாடேல் பிரமாணந்தீட்டுவாராக.

இனி அநித்திய சித்திலேயே அநித்திய ஜடங்கள் தோன்றுவன வென்பதொரு அநியாயமாம். கனாக் கண் புருடன் மாட்டனேக விதமாய் சடங்களைக் கண்டு தெளிக. அன்றியும் சடம் சடவிவர்த்தோபாதான மன்றுமென்க; என்னின் முன்மண் சடவிவர்த்த உபாதானமெனக் கூறியிருத்தலின் முற்கூற்றிற்குப் பிற்கூற்று முரணாதோவென ஆசங்கிக்கின்? உண்மையே ஆண்டும் மண்ணவச்சின்ன சித்தே விவர்த்த உபாதானமெனத் தேர்க. இந்த விவர்த்த விவகாரம் ஆண்டாண்டு விரித்திருத்தலின் ஈண்டித்துணையேசாலுமென அமைவாம். வினாக்கிளம்பில் வரைவாராக. விடைகொடுப்பான் றடையின்றுமென்க. இனி சீவேசுர சகத்துக்கள் பொய்யென்பதோ ரநியாயமாம். சீவேசுர உபாதிகள் பொய்யேயன்றி சீவேசுரர்கள் பொய்யன்றென வச்சிரத்தம்பம் போனாட்டி யிருத்தலின். ஈண்டு விடையிறப்பதனாவசியமாம். சகத்தோமித்தை யென அளவில் பிரகாரம் நாட்டி யிருத்தலின் பூர்வாபரம் நன்றாயிக்கிரந்தம் பார்ப்பதினானே விளங்குமென்க. மாயாவிடயமோ "எப்பொருளுமாயையினா லெனச்சிலவ ரியம்புவர்கள்; மெய்ப்

பரமன்றனையொழிப வேறொரு மாயையுமில்லை ஒப்பு
ரிய பரனொழிப வொருமாயை யுண்டாகி லப்பரமன்
றன் பெருமைக்கது நேரே யழிவன்றோ பெருமை
யினிற் சங்கோசம் பிறவாது பிறக்குமெனி லருமறை
வாக்கியம் பொய்யா மப்பிரமாணமுமாகு பொருவில்
பரானந்த பரிபூரண மெய்ச்சுடராகுந் தெரிவருமா
தேவனல்லாற் றிகழ்வதொரு சிறிதுமில்லை இதுவே
முடிந்த நிலமென்னும் செய்யுளையும் ஐயன் சைவாக
மங்கட்கு மென்னும் யாப்பையுமுணரற்பாலதாமீண்
டெண்க. எனவே மாயா விடயம் மாயாவிடயமென்ப
தற்றுமாயும் விடயமா மாறும் அதுவுஞ் சிற்பரத்தே
யென்பதும் தெரிந்துகொள்க.

இனி நித்தியமாகிய பிரமம் நாமேயென்றும் என்ப
தோ ரபிபாயமாம், இதனை யபிபாய மென்றனரே
அநித்தியமாய பிரமம் யாமென்னல் நிபாயமாமா, ஆ
மேல் நம்பி விறுப சீடனுக்கு அந்தகோலாங்கூல
நிபாயமாய் அநித்தியமாய அசேதனத்தை ஆன்மா
வாய்க் காண்பிக்கின் அனர்த்தமன்றோ நேரும். அன்
றியும் இவர்முன்னோராய ஸ்ரீ மெய்கண்டதேவராதியர்
கூறியுள்ள சிவாகம்பாவனை வாய்ந்த நூற்களையும்
கர்த்தராய அவர்களையும் அவர்பரம்பரையாரையும்
அந்நூற் படித்தும் அபிபாய வாதத்திற்குள்ளாக்கின
ராவர் அல்லது அந்நூற்களைப் படித்தும் பொருடெரி
யாமல் தம்பேரிலையும் தம்மாசிரியர் பேரிலையும் அநி

யாயத்தை பிறர்வாயிலாய் ஏற்றவரன்றோவாவர். தமக்கும் தம்முன்னோர்க்குங் கேடெந்தாலும் வரட்டும் பிறர் கெட்டாற் சரியென்னும் எண்ணம் விவேகிகட் கழகாமா. இனியகப்பிரமங் கூறுமநியாயமொன்றும் இவ்வநியாயம்பற்றி வேண்டிய பிரமாணோக்திகள் முன்னமே பன்னியிருத்தலி னிஞ்ஞான்ற னாவசியமென விடுப்பாம்.

இதுநிற்க இன்னுஞ் சிலபடனில் காரியம் பயில்வதை அறிஞரே காண்மின் காண்மின். அதுயாதுகொலோ வெனில்ஃதாம்:— "ஆய்ந்தவென் சிந்தை சிவநாயகன் வசமாகைக்கே, ஏய்ந்தது நிலையு மெய்தா திறைவனைப் பிரிந்தாள் போல" என்னும் ஞானவாசிஷ்ட வசனத்தைக் கொண்டு சிவநாயகன் பசுபதியென்பதை விளக்குகின்ற தென்றார் ஈசுரனைப்பசுபதியென்பதில் எமக்கும் முன்னமே யே சித்தித்திருத்தலின் விவாத மின்றெனினும் எமக்கு முன்னிது சித்தியாதது போல மயங்கிச் சித்திக்கச் செய்து இவர் சித்தசாதன தோடத்தையடைவதைப் பற்றிமாத்திரம் விசனிக்கின்றனம். இதே செய்யுளைக் கொண்டு பசுபதிபாச திரிபதார்த்தங்கள் அநாதி நித்தியமென்னுந்தாற்பரியங்கண்டாராமே, அஃதெவ்வேதுவானோ? ஒருவாறு அநாதி யென்னுந் தாற்பரியங் கோடக் கிடைப்பினும் பாசவிடயத்தே நித்திய தாற்பரியங் கிடைத்த தெப்பதவேதுவைக் கொண்டோ. தட்டிப்

பேச ஆளில்லாவிடிற் றம்பிசண்டப் பிரசண்டன் என்பது போலக் கேள்க்க ஆளில்லாவிடி விட்டப்படி உரையாடுவார் போலும். கல்வியில்லார் இதனை ஆமென்று கேட்டு மகிழினும் கல்விபாலாய நல்விவேகியர் மருளாரன்றே.

இதுநிற்க வினி ஞானவாசிட்டத்திலுள்ள வீத கவ்யோபாக்யானத்தின் மாட்டிலகாநின்ற 74-வது யாப்பின் 3-வது பாதத்தில் ஈனமில் சைவாகமர்க்குச் சிவனாய்" என நவின்றிருத்தலின் ஈனமில் என்ற விசேடத்தாலும் சிவனென்னுஞ்சிறப்பு நாமத்தானும் சிவாகமம் ஒன்றேமற்றென்னூலினும் ஈனமிலாமெய்ந்நூலென்றும் அதிற்கூறும்சைவநெறியே மெய்ந்நெறியென்றுந்தாற்பரியமாமென்றார். சிவாகமத்தையும் ஸ்ரீஞானசம்பந்தராதியராய பரமகுரவருடன்பட்ட சுத்தாத்வைத சைவத்தையும்யாவரே வேண்டாதார். இவரதன் உண்மையுணராமலும் போலியுரைசெய்துகொண்டுந் திரிவதுமாத்திரமெமக் குடன்பாடின்றென்க. அன்றியுங்கவியில் எதுகைநோக்கி ஈனமில் என்றும் சைவம்த்மென்பதை யுபலக்ஷணமாய் சைவாகமமென்றும் கவிநாயகரே கூறியதாகும் கீர்வாணமூலத்திலோ "சிவ:சைவமத ஸ்த்தானாம்" எனமாத்திரமேயுளது இதன்பொருளோ சைவமதத்தர்கட்குச் சிவனாயும் என்பதாம். எதுகை நோக்கிநுதலியதென்றும் உபலக்ஷணமாயுரைத்ததென்றும், இவரறியாதது குரு

வின்றியதனை யாராயப் புகுந்த குற்றமேயாம் இர் வாணவலியிலலோ ரெல்லாம் சாஸ்திரவாதஞ் செய் யப்புகுந்த தாற்றான் வந்த மழையும் வானிலேயே அஞ்சிநின்றுவிடுகின்றது இனியித்துணைக்காரியத்தே புகாதிருக்குமாறு இதனையறிவுறுத்து கின்றனம். கொண்ட கொள்கையிலேனும் நின்று நன்மையடை யாமற் குறைக்காலத்தையும் வீணேப்கழிக்கின்றனரே யென்னும் கருணையாற்றான் இத்துணையு முபதேசிப்ப தென்றறிக.

இந்தஞானவாசிட்டங்கொண்டே பசுபதிபாசம் நித் தியமெனக்கூத்தாடுகின்றனரே இவரையேயாமொன் றுவினவுவாம், "சித்தர்பொனறுவர் தாருவனுஞ்சிந்தை குவன் சிவனயன்றிருமாரபன், றத்துவந்தனிலொன்று வர்காலமுந்தருமமு முடிவாகு, மத்தவானும்போமயக் கமே தருவதாய் வாக்கொடு செவிக்கெட்டாச், சுத்த மாம் பொருளொன்றிணைலிகழ்வுறத் தொல்லுலகிறு வாகும்." என்றவ்வாசிட்டத்தின் கண்ணேயே சிவன யன்றிருமாரபன் றத்து வந்தனிலொன்றுவர், என்றுள் ளதே அதன்கண் மும்மூர்த்திகட்கும் லயம் கூறப் பட்டுளதே அதற்குப் பொருளி யாதென்பதேயாம். மகாப்பிரளய வர்ணனமிதுவாதலால் மும்மூர்த்திக ளும் லயமாகின்றனர் என்றிடினே உபாதிவிடுத்தா? உபாதியோடா? ஆதியதேலிவர் சகளநித்தியமென்ற பக்ஷமே நீங்கியது; என்னை? உபாதியின்றியிருபாதி

கத்திற்குச் சகளமே சாதிக்க வொண்ணுமையின். உபாதியோடென்னினே நிருபாதிகத்தே சோபாதிகம் லயமாதலியாங்ஙனம் அதற்குத்தான் திருட்டாந்த மியாதுகொல்? அத்வைதிகள் நூலுக்குத் துவைதி களாய யாங்களுத்தரங் கூறவேண்டிய அவசியமின்று மென்னின்? மற்றைக்கவிகள் மாத்திரம் இவர்க் காண்டுபிரமாணமாயது யாண்டையதென்க. ஆயின் நீரே கூறுமெனின்? உபாதிவிடுத்துச் சிதானந்தமா யிருத்தலே யெனக்கூறுவேம், இக்கூற்றும் பிரமா ணத்ததாஸ்வகபோல கற்பிதத்ததாவெனினே? பிர மாணத்ததேயாப்; பிரமாணமும், "அயனொடுமால் சங் கரனுஞ் சதாசிவனு மிந்திரனுமருக்கன்றானும், வியனி லுபசாந்தராம் வேலையினிலுபாதியெலாம் விட்டு நீங் கிப், பனில் சகமென்கின்ற பற்றகன்று சின்மயமாம் பரமரூப, முயர்விகற்பமிலா வடிவாயெங்குநிறை சிவ மாகியொன்றாய் நிற்கும்" என்பதனாற் கண்டுதெளிக.

இது நிற்கவினி ஷை பிரகலாதனகதையில் "ஆவா விப்போதுள்ளபடியறியு நெறியிலனை யறிந்தேன், ஓவாவிகற்பமற்றறிவுள் ளொளியாஞ் சீவனுருவிது வோ." என்பதனால் சீவன் நித்தியனே" என்கின்றார் சீவன் நித்தியனென்பது உண்மையே, இவர் எடுத்துக் காட்டிய செய்யுளில் எந்தப்பதம் நித்தியத்தைத்தா பிக்கின்றதோ அதனையினிவரையும்போதேனும் சற்று வரைந்தால் இவர் ஆற்றலஞ்ஞான்று காணலாம் ஒன்

றைச் சாதிக்கவேண்டின் எது அவசியம் வேண்டற் பாலதெனபதையும்வாக்கியார்த்த போதத்தின்பொருட்டுத்தாற்பர்ய ஞானம் முக்கிய சாதனமென்பதையும் இவரினிதறியவேண்டும்.

இனி ஈசுரகீதையில் "எந்தப்பிராணிகளும் பசுக்களென்னப் படுமிங்கதிபதியான் பந்தப்படுக்கு மென்மாயாபாசமதனாற் பசுபதியாய்த் தொந்திப்பது வீழ்ப்பதுவாமித் தொழிலென் விளையாட்டேயன்றி, யிந்தப் பசுக்கள் கட்டுநர்களில்லையவிழ்ப்பார்களு மிலையால்." என்பதனால். "பாசங்கொண்டாவி பலவும் பிணிப்பானும் நேசங்கொண்டாங்கதனை நீக்கியருள் செய்வானும் ஈசன் சிவனென்றியம்புமறை" என்ற சைவசித்தாந்தமரபின்படி பதிபசுபாசங்களின் அநாதி நித்தியத்துவம் விளக்கி யிருப்பதையு" மென்றார் இதன் கண்ணும்பாசம் நித்தியமென்பதற்குயாதொரு பிரமாணமுங்காணேம். பசுபதியென்பதோயா மொப்பியதையேதத்தை போலனுவாதஞ்செய்தலின் பயன் என்னோ? ஈண்டுமிவர்மேலிக் கடாவிடுப்பாம்:—"பந்தப்படுக்குமென்மாயாபாசம்" என ஈசுரகீதையிலும் "பாசங்கொண்டாவி பலவும் பிணிப்பானும்" என சைவசித்தாந்தமரபிலும், பாசமாய கரணங்கொண்டெந்தை பசுக்களைப் பிணிப்பதாய்க் காட்டியிருந்தன்றே அஃதெதஞ்ஞான்றென்பதேயாம். ஒரு காலங்

கூறமுடியாததாதலின் அநாதியென்றே சுவிலவேண்டி வருமன்று, வரவே அநாதியே பிணிக்கப்பெற்றதென வாம், ஆகவே அநாதியென்ற சொல்லோ காலங்கடந்ததாம் பிணிக்கப்பெற்றதென்பதோ காலத்துட்பட்டதாம், ஆகவே பரஸ்பரம் விருத்தமாம் பிணிக்கப் பெற்றதெனினோ ஒரு காலத்திற் பிணிப்புறுமனுமிருந்ததென்றாம். ஒன்றுற்றப்பெற்றதெனின் ஆறறற்கு முனனின்றியிருப்பது சித்தமாம் சித்தமாகவே இறந்த காலத்தேபிணிக்கப்பெறு,ததாய் நிகழ்காலத்தேபிணிக்கப்பெற்றதாயாம். அங்ஙனமாகவே பிணிக்கப்பட்ட காலமாதியாகுமே யன்றியநாதியாகா? ஆதியுமநாதியும் பரஸ்பரம் முரண்கொள் தன்மமெனயாவரே யுணரார். அவ்விறந்த காலமும் முக்காலத்துட்பட்டதாதலின் காலங்கடந்ததெனப் பொருட்டும் அநாதியென்பதெங்ஙனம்? இதனை நன்கு யூகித்துவரைய முடியின்வரையலாம், அஃதன்றிக் கதையையும் காரணத்தையும் எழுதிவிட்டுப் போவதில் சாரமேதுமின்றும் அன்றியும் சாஸ்திரஞ்ஞர்களும் மதிக்காரெனத் தெரிந்துகொள்க.

இதுவெல்லாமிங்ஙனமாக அரிய அறியாமையாலிவ்வயோ விருத்தர் தீட்டிய இப்பெரிய விந்தையை வித்வத்சிகாமணிகளே காண்மினோ! காண்மின்!! இத்துணைஞான்றுமிங்ஙனங்கண்டேயீர் இஞ்ஞான்றுதான்

புதிது மிகவுமற்புதம்! அற்புதம்!! அற்புதம்!!! அஃதி யாதுகொலோவெனின் றனக்கருக மற்ற கீதாவிசா ரத்திலிவ்வயோவிருத்தர் புகுதலேயாம்; ஆ! ஆ!! ஆ!!! எவ்வண்ணம்புகுந்தனர்? ஸ்ரீ சங்கர ஆஞ்சனேய ஆனந்தகிரி சங்கரானந்த ஸ்ரீதர மதுசூதனுதியரும் ஸ்ரீ இராமானுஜ மாத்வாதியரும் புகுந்த நெறியா அயலா? அயல்! அயல்! அயல்!!! ஆயினதைச்சற்றுக் காணவேண்டுந்தரிசிப்பீராக. தரிசிப்பிக்குதும் சாவ தானமாய்க் காண்பீராக அதாவது:—“ பகவற்கீதை தேவாசுர அத்தியாயத்தில், கிருஷ்ணமூர்த்தியானவர் முதலில்தேவர்முதலிய சிஷ்டர்களுடைய நற்செய்கை கூறிப்பின் அசுரர் முதலிய துஷ்டர்களின் தீச்செய் கை கூறும்வரிசையுள்ளே. எண்ணிய வுலகமும் உல குக் கீசனும் புண்ணியபாவமும் பொய்யென்றே கொள்வர் பெண்ணினோடாண்புணர்கின்ற பெற்றியா, னண்ணிய யாவையுமென்று நாட்டுவார். தொடக்கற வில்லா நினைவெனப்பட்ட சூழலைப் பற்றியே சுழல் வார், அடக்கரிதாய மயக்கமென்கின்ற வலையுளே யகப்பட்டு நின்றார்.........கடப்பரிதாய நரகமென் கின்ற கடல்களில் வீழவேகடவார். என்று கூறி நித் தியங்களென் றெண்ணப்பட்ட பாசவிகற்ப உலகங்க ளும் அங்குள்ள சீவர்களும் இறைவனாகிய ஈசனும், புண்ணியபாவ முதலியனவும். பொய்யென்பவர்கள் அதிபாதக துஷ்டர்களென்றும், அவர்கள் நரகங்க

னீரேயெ அன்டைவரென்றும் விளக்கியிருப்பதையும் இன்னும்மின்வபோல்வன பலவற்றையும் உற்றுநோக்காத தென்னேயோ " என்பதுதானது.

இவ்வண்ணம் இவர் கூறியதால் வேதாந்திகளை நாத்திகரென நினைந்தனர் நினைந்ததுமல்லாது அருமையான பிரமாணங்களையு மெடுத்தன்றோ காட்டினர். இன்றின்று ஈண்டு நாத்திகத்தைக் கொண்ட உலகாயதரைக்கண்டித்தேமெனின்? முன் பின் பிரசங்கமின்றிக் கண்டிக்கவேண்டிய காரணமென்னோ? வேதாந்திகளைக் கண்டித்ததென் நீரெங்ஙனங் கண்டீரெனின், இனியிவர்கள் கைவல்லியத்திலேயே எனவாரம்பித்து தெளிவாயிருக்கவெனவிடையே பொறித்து அகம்பிரமங் கூறுமஙியாயமென்னேயோ எனவும் ஞானவாசிஷ்டம் ஈசுரகீதை முதல்வற்றில் விளக்கியிருப்பதையும். பகவற்கீதையில் கிருஷ்ணமூர்த்தி மேற்புகன்ற போல் விளக்கியிருப்பதையும், இன்னுமிவை போல்வன பலவற்றையும் உற்று நோக்காததென்னேயோ? எனவும் அகம்பிரமவாதிகளாய இவர்கள் மேற்புகன்ற வண்ணம் கூறுமஙியாய மென்னேயோ உற்று நோக்காததென்னேயோவெனவேகவாக்கியமாகமுடித்துளார்ஈண்டகம் பிரமவாதிகளைவிடுத்து உலகாயதர்வரவேதுவைக் காணேம். கானதாகவே இவர் கூறிய அசுரசம்பத்தை வேதாந்திகள் பேரிலன்றோ வைத்தனர் அத

னைச் சற்றாய்ந்து காட்டுவல் கவனிமின்! எண்ணிய உலகமும் உலகிற்கீசனும் புண்ணிய பாவமும் பொய் யென்றே கொள்வர்; உலகிற்கீசனைப் பொய்யென்று யாவர் கூறுகின்றனர் அத்வைதிகளா? நாத்திகரா? அறிஞராயவித்வத் சிகாமணிகளே நீவிரேபுகல்மின். உலகமும் புண்ணியபாவமும் சம்சாரதசையிலேயே பொய்யென்பது உலகாயதர் கூற்றன்று அத்வைதிகள் கூற்றே, சம்சாரதசையில் அவைவியாவகாரிகசத்தை யுடையதாயிருப்பதென்பதாம், ஆகவே இருவர்க்கும் எத்துணை வேறுபாடிருக்கின்றது, இருந்தும் பிறித் தறியாதது வயோவிருத்தர்கசடா,மற்றவர் தங்கோதா?

பெண்ணினோடாண் புணர்கின்ற பெற்றியா, னண் ணியயாவையுமென்று நாட்டுவர். இதனைபெண் ணுமாணும் பெட்புடன் புணர்தலால் யாவும் நண்ணு மெனவாகின்றதே ஈசனின்றிக்காமமே இச்சகத்திற் குக் காரணமெனவாகின்றதே. இதுவென் பாமர ராய உலகாயதர் கூற்று அன்றி சககாரணனீச னென்றெப்பும் வேதாந்திகள்கூற்றா? கல்விமான்களே நீவிரேகழறுமின். இத்துடனில்லாமல் கடப்பரிதாய நரகமென்கின்ற கடல்களில் வீழ்வே தடவார், என நரகப்பிராப்தியுமத்வைதி களுக்கு ஸ்ரீ பகவான் கூறி யருளியதாகவன்றோ கூறினர் அம்மனம் ஸ்ரீ பகவத பிப்பிராயமேல் அத்வைதஞானத்தை யாவற்றினுஞ்

சிறப்புடையதெனப் புகழவேண்டியதேயின்றன்றோ. அன்னணம் புகழ்ந்துளதோ வெனின்? ஐயமென்? சிறிதுகாட்டுதும் காண்மின்:—நெஞ்சினையடக்கலும் நிலைகெடாமையும் = சித்தத்தையான்மாவின் கண்ணேகாக்கிரமாகும்படி பண்ணும் யோகமும், பிரமசொரூப நிச்சயமான ஞானவழியாமையும் எனவும்; உரைசெயற்கரிதாய் நெஞ்சினுணர்விடப்படாதாயெங்கும், புரையறக்கலந்து போக்குவர வின்றிப் பொலிந்ததொன்றைக் கரைசெயற் கரியவாய புலன்களைக் கடந்து காண்பா னரசமற்றியானே யென்னினன்னிய மென்னலாமோ. இதன் பொருளோ, வசனித்தற்கசக்கியமாய் மனத்தா லறியப்படாததாய், எங்கும் நிரந்தரமாக வியாபித்துச் சலன ரூப விகாரரகிதமாய்ச் சிறந்த நிர்க்குணப் பிரமரூபமான அக்ஷரத்தை நிக்கிரகித்தற் கசக்கியமாய ஸ்ரோத்திராதி இந்திரியசமூகங்களை நிவிர்த்தித்து அறியாநிற்பவன் அருச்சுன பிரரூபமாகிய யானே அவனை என்னினும் வேறென்றுசொல்லக் கூடுமோ? எனவும்; காரணமிறந்தொன்றிற்குங் காட்சியிற்படாததொன்றைச், சேர்பவர் வருத்தம் வேறு செப்பிடலாவதன்று, லோர்வரிதிதுதான் வாழுமுயிர்களாலாவதொன்றோ, வாரவர் பெருமைதன்னை யளவறுப்பவர்களையா. இதன் பொருளிதுவாம்:—தனக்கொரு காரணமில்லாமல் எவ்விந்திரியத்திற்கும் விஷயமாக வகப்படாததான நிர்

விசேஷ அக்ஷரதத்துவத்தை அடையாநிற்பவருடைய கிலேசமானது வேறொருகிலேசங்களோடு சேர்த்துச் சொல்லலாவதன்றும், அறிதற்கரிய ப்ரமவிஷயமான இந்நிட்டைதான் தேகாபிமானமுடைய மநுடரால் அடையலாவதொன்றோ? அடைந்திடின் அவரதுமகிமையை அருச்சுனா வரையறுத்துக் கூறச்சமர்த்தர் யாவர். எனவும் அத்வைதநிட்டர்களை ஸ்ரீ பகவான் புகழ்ந்தருளியிருப்ப இவ்வயோவிருத்தர் மாத்திரம் அத்வைதநிட்டர்கட்கு ஸ்ரீ பகவான் நரகங்காட்டியருளியதாகக் கூறல் எத்துணைவியப்பை விளைக்கின்றது வித்வத்சிகாமணிகளே காண்மின்.

இன்னும் அத்வைதிகள் விடயத்தே ஸ்ரீபகவற் பிரமாணங் காட்டுவல் காண்மின் "கண்ணிற்கருதருமறிவைக் கருதிய வறிவே மிகவரு களிகூர்வோன்" "மெய்வகை தனக்கும் புலன்கட்கு முள்ள வேறுபாட்டினை மிகவறிந்தோனைவகையியற்கைப் புலன்களே பொறியுற்றழுந்துகின்றன வென வசங்கான்" ஈண்டு தனக்கும் என்றது பிரமமாய தனக்கென்றுணர்க. "பிரமமானோர் பிரம நெருப்பிடைப், பிரமமாகிய மந்திரந்தன்னினாற், பிரமமாய சருவுடன் பெய்தபின், பிரமமே யடைவாருளர் பின்னுங்கேள்" அறிவதாகிய அங்கியிலேகொள, வறிவையே சிலராகுதி பண்ணுவார், செறிவதாஞ் சமத்தீயிடையே சில,

ரெறிவதாய புலன்களை யீவர்கள்" "உந்தியப்பொ
றியைந்தையு மொக்கவே, யிந்தியத் தழல்வாயிடுவார்
சிலர், நந்தியத்தொழில் யாவையு ஞானநெய், சிந்தி
யோகவெந்தீயிடுவார் சிலர்." "காணுங்கேட்குமுழு
மோக்குங்காலா னடக்குங் கண்வளரும் பேணுந்
துறக்கு மூச்சுவிடும் பேசும் விழிக்குஞ்சிம்பிளிக்கும்,
பூணுமின்னும் பலவெனினும் புலன்சேர் பொறியின்
புணர்ப்பென்றே, தூணுங்கிரியுமென வொன்றுந்
துளங்கான் விளங்குந் துணிவுடையோன்" "யா
தொன்றிந்தப் புலனறியா வளவிலின்பமா யிருக்கும்,
யாதொன்றினைச் சென்றடைந்தோர்கள் பின்னை
யதனி னிரண்டாகார், யாதொன்றினைப் பெற்றவரித
னின் மிக்க தொப்பதுண்டென்னார், யதொன்றிந்த
வறிவுக்கே யறிவாய் நிற்குமதனின்றோர்" "தேறு
நெஞ்சினனாய்த் தன்செயலலால், வேறுகண்டறியா
மெய்யறிவினா, லூறிலிந்த வுடம்புடன் வேறு பெற்
றேறி நின்றவனே யின்ப மெய்துவான்" "இழியா
திந்தயோகத்தை யென்றுந் தலைநின்றவனென்று,
மழியா வின்பத்தினை யின்பத்தாலே யடையுமதுநிற்க,
வொழியாவெல்லாவுயிர்களுந் தன்னுள்ளே காணுமவ
ற்றுள்ளே, கழியாதெங்குந்தானின்ற பரிசுந்தெரியக்
காணுமால்" "யாவனொருவனென்னை யெல்லாவுயிர்
களிடையு மென்னிடையே, மேவவெல்லா வுயிர்களை
யும் வேறாகாதே மெய்காண்பான் றேவர்பகை முன்

செருத்தோனே யவன் யாதேனுஞ் செய்திடினு, மாவலுவனாகின்றேன்யா னதுநீயெது மையுறேல்'' 'இன்னவர் தங்களிலென்னொடும் வேறு, யுன்னலி லாமையின் ஞானியுயர்ந்தோ, னன்னவனல்லனெனக் கவனுக்கே, நன்னலனாகுவனானு நலத்தோய்'' "ஓதருஞானியென் னுண்மையினுள்ளே, யெய்தலினாலவனே னெனவேயா, மாதலுமின்னனேக மெனச்சொல், காதலிறந்தபவங்களினாலாம்.'' "விரியவுணர்ந்தவிழூப் பொருளெல்லா, முரியவெனன்றியிலாத வொழுக்கந், தெரியவறிந்தெனையே செறிகிற்பா, னரியனவன்பெறு தற்கயில்வேலோய்'' "அறிவினிலமிகிலாதவையெலா மழியவே, செறிவினாறிவுவானிரவி போற்றிகழுமா, னெறியினாலதனிலே நிலையுமாயதனிலோர், பிறிதிலா வகையினார் பிறவியானதுவிலார்'' "அறிவினாலென்னையாக வறிந்து கொண்டமைதியாலே, பொறிவழி யடைத்தெப்போது மென்னையே போற்றி செய்து, நெறியினால் வழூத்திவாயாலென்னையே நினைநதுநெஞ் சாற், செறிதருமிவர்கள் கண்டாய் தேவரிற்றெரியப் பட்டார்'' "உலகமுந்தானும் வேறிலாமையினாற்றானொருபொருட்கு மஞ்சாதே,'' "சத்துவமாந்தர் பாகதிய டைவர்தமத்துளோரதோகதி சார்வார், மத்திமகுணத்தோராயினோர் நடுவின்மாநுடப்பிறவியாய் வாழ்வா, ரித்திறமாயவுருவமே விகாரி யானவிகாரியென் றிவற்றை, மெய்த்திறனாக வறிந்தவனறிந்த பொரூளி

லே வீட்டின்ப மடைந்தான் உடம்புடனிருந்தேயுரை த்தவிக்குணங் கண்மூன்றையு முள்ளவா றறிந்து, கடந்தவன் பிறப்பு மூப்பிறப்பாதியாகவே கட்டுரைக் கின்ற, விடம்புரையிடும்பை யாவையுங்கடந்து வீட் டின் பவினைபவன்", "நன்றாய்ஞானத்திரளாகி நாநா விதமாய் விரிந்தெங்கும், பொன்றுகின்ற பூதங்கடோ றும் பொன்றுப்பொருளாகி யொன்றாய் நிற்பதொன் றினையப்படியே யுணருமுணர்வதனை, யன்றுமென் ஞர் சாத்துவிக ஞானமெனவே யமைப்பாரால்." என்பனவாதிபலவால் அத்வைதப்பிரசம்சை ஸ்ரீ பக வானுற்றிருவாய் மலர்ந்தருளி யிருத்தலின் அசுரசம் பத்துடைய நாத்திகத்துட் சின்மாத்திரவாதியரை ஸ்ரீ பகவான்வைத்தருளின ரெனத் தெய்வசம்பத் துடையர் கூறுர்.

அன்றியும் இவர்முன்னோர்தமது நூற்கண்ணிப்பக வற்கீதையை அருச்சுனற்குப்போரின் பொருட்டுப் புகன்றதாதலின் ஞானநூலன்று மயக்கமாயாநூலெ னக்கொண்டிருத்தலின் இவர்பிரமாணமெனக் கையா டிய துகுருத்ரோகமேனும் நன்றெனுஞ்சின்மையேனுமா மன்றோ

அன்றியுமிவர் குருவின்றியிந்நூலைக்கையாடினமை யின் ஒன்றற்கொன்று பொருண்மாறுட்டமாயிருத்தே அறிஞர் இவர்மதியை வியந்து நகைத்தலோடு ஸ்மிரு

திதூஷணத்தாற்பாதத்திற்றுன்பத்திற்கு மேதுவாயமை காண்க. இவ்வண்ணமெல்லாம் இவரிதம்போல்வரை வது தனக்குத்துன்பம் பயப்பதன்றித்தமையடுத்த வர்களையுந்தூடித்துக்கெடும்படிசெய்கின்றதையிவரோ ராதது இவர்பருவவிசேஷமேயன்றி வேறென்னும். இனியேனுந்தங்கொள்கைப்பானின்று அன்னியத்தை த்தூஷியாதிருப்பாராக இஃதேயிவர்க்கினிப்பெரியவு பதேசம்.

இதுமிற்கவினித்தம்மதச்சார்பாய ஒருசெய்யுளையு தாகரித்து இன்னணம்வரைவான் றொடங்கினர்:— இவர்களைப்பசுஞானிகளென்றுவது கூறுதற்கும்பொ ருத்தமில்லை என்னை? இச்சுருதியின்படிபாசவிகல்பதத் துவலெக்ஷணமுற்றுணர்ந்து நேதிகளைந்து அவற்றி னீங்கிய ஒருவன், அவ்வளவிலேயேநாம் இப்பாசவிக ல்பதத்துவஜடங்களுக்கு மேம்பட்டசிற்சொரூபியல்ல வானென்று தன்னையுணர்ந்தகளிப்புமிகுதியால் தனக்கா தாரத்தலைவனை மேல்நோக்கியுணரும் அறிவுசேர்ந்து நானேபிரமமென்று கூறுவான் இவர்களோ? தம்மை யுணர்தல் சிறிதுமின்றித் தத்துவங்களொன்றை யாவது முற்றுணர்ந்து நேதிகளைதலுமின்றி வாய்ப றையாக நாக்கடிப்பாக வாசாமாத்திரம் நாம்பிரம மென்று பறையடிக்கின்றார்க ளாதலா னெனக." என்பதாம் இதன்கண், பசுஞானி யென்றனரே,

பசுவென்ப தியாது? அதனிலக்கண மியாது? அதன் ஞானமென்பதியாது? அந்த ஞானமென் பரிச்சின்ன கோசரமா? அபரிச்சின்ன கோசரமா? என்பனவற்றை யினிவரையும் போதுவரைவாராக இப்பாசவிகல்ப தத்துவஜடங்களுக்கு மேம்பட்ட சிற்சொரூபியல்லவா என்று தன்னையுணர்ந்து என்றனரே, இதன்கண், ஜடங்களுக்கு மேம்பட்டதன்னை என்பதில், இத்தானென்பரிச்சின்னமா? அபரிச்சின்னமா? ஆதியந்தலழியும். அந்தமந்தலை? சிவத்திற்குமிதற்கும் பேதமென்ன? உபாதியின்றிப் பேதமின்றென்பது மறைமுரசாம் அன்றியுமுணர்ந்த என்றனரே அக்கரணத்தைச்சற்று கிளப்பில்விடைதருதும். அன்றியுங்களிப்பு என்றனரே முன்னுள்ளதா? இல்லதா? உள்ளதேலென்மறைபடல் வேண்டும் எதனால் மறைவுற்றது? அநாதியேயா? ஓர்காலத்தா? இல்லதேலுண்டாமா? உண்டாயிற்றுணிறவாதா? இறக்குமேலந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேனென்னுந் திராவிடத் திருமறையோடுமாறுறாதா? அன்றியும் மிகுதியென்றனரே? மிகுதல் குறைதலியாங்ஙனமோ? தனக்காதாரத்தலைவன் என்றனரே, தனக்குந்தலைவனுக்குமாதாரஆதேயபாவ மெங்ஙனம் அதற்குத்தான்றிருட்டாந்தமென்? மேல்நோக்கியுணருமறிவென்றனரே அஃதின்னதென வென்கிளப்பவில்லை? பறையடிக்கின்றாரென்பதந்தமாய்ச்சில கூறினரே இவர் ஆந்தரத்

திற்சென்றுபார்க்க அந்தரிப்பாமியா? தன்மனம்போம் போக்கேயறியாதவர் தாமா பிறர்மனத்தைப் பரிசோதிப்பவர்! சூரியன்மகிமை அந்தனுக்குத் தெரியாதேற் சூரியன்மகிமை குன்றுமா? கோணுனைவன் சாஸ்திரியார்பாடகர் பிரசங்கம் பாடல்களைக்கேட்டு நகைத்த மூதல் போனுமாமிவர் கூற்றன்றிவேறென்னும்.

"தாம்பிரமங் கண்டவர்போற் றம்மைக்கண்டாங் கதுவே நாம்பிரமமென்பவர் பானண்ணுதே என்று ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந் தருளியிருப்பதாகக் கூறினர் இந்நம்மன்பர்; இதற்கு விடையாதெனின் "ஈசன்வேறியான் வேறென்றெண்ணுகின்ற பாதகரை நீசரெனக்கண்டு நினையென்றான்" என ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருந்தகையின் றிருவருள் பெற்ற சிவஞானவள்ளலார் பிரம்புரத் திறையருளிய தாய்த் திருவாய் மலர்ந்தருளிய தேச்சானுமென்க. இனி "தத்துவமசி" முதலியன திரிபதார்த்த அநாதி நித்தியத்வஞ்சார்திக்கு மென்றனர் அதைச்சற்று வியக்த்தஞ் செய்யிற் பொறிப்பான் எதிர்நோக்குகின்றனம். சுபம். சுபம். சுபம்.

ஸ்ரீ அத்வைதார்த்தப் பிரகாசிகை
யென்னும் சங்கரத்வேஷியர் வாய்ப்பூட்டின்
இரண்டாவது பாகம் முற்றும்.

---

சிவமயம்,

ஸ்ரீ மகாகணேசாயநம:

# ஸ்ரீ விசுவநாதாஷ்டகம்.

கங்கையின்றரங்கவெழில் கொழிவேணிக்கலாப ஞய்ச்கவுரியாலனிசந், தங்குறுகவின் கொளிடையனு யிடைன்றன் வயிற்பிரியனுபனங்க, னங்கநாசகஞயறற் பொழிற்காசியரும் பதிக்கிறைவனே யான, திங்கள் சேர் விசுவநாதனைத் தினமுஞ் சிந்தையிற் பணிந்து போற்றுதுமே, (1)

வாக்கினைக்கடந்து மளவிலாக் குணங்கள் வாய்ந் தும் வாகீசவாமனஞு, நீக்கருமமரர் சேவிதபாத நின் மல பீடனுய் வாமந், தாக்கும் விக்கிரக வாத்திஞற்ற மிதை தங்குறு காசிநாயகனுந், தேக்குறு விசுவநாத னைத் தினமுஞ் சிந்தையிற் பணிந்துபோற்றுதுமே (2)

பூதநாயகனைப் புஜகபூடணத்தாற் பூடிதவாகனை ப்புலித்தோ, லோதுடையுடைய சடிலனைவிழிமூன் றுடையனைப்பாசவங்குசனை, யேதமிலபயவரமருளிறை யாமிரும்புகழ்க்காசி நாயகனைத், தீதறும் விசுவநாத னைத் தினமுஞ் சிந்தையிற்பணிந்து போற்றுதுமே (3)

சீதளமதியினெழில் பொழிமவுலிதிகழ்வனை ய ழல்விழியனலாற், போதுறுசரனைப் பொடித்திடுமழு ழைதப்பொங்கரவிறையினுலணிசெய், காதணியினனைய

ருந்தவர் விரும்புங்கங்கை சூழ்காசி நாயகனைச் சே
தனவிசுவநாதனைத் தினமுஞ் சிந்தையிற்பணிந்து போ
ற்றுதுமே (4)

பாவமாமதத்த கரிகளுக்கரியாய்ப் பன்னகத்த
னுஜபுங்கவர்க்குத், தாவுறுகலுழனுகியே மரணஞ்
சரைய ஞாடவிகட்கடவி, மேவுபாவகனுயிறப் பவர்க்
குதவி மிளிர்தருங் காசிநாயகனுந், தேவனை விசுவநாத
னைத் தினமுஞ்சிந்தையிற் பணிந்துபோற்றுதுமே. (5)

ஒளிமயமாகிச் சகுணநிர்க்குணமா யொன்றதாய்ச்
சுககனவுருவா, யளிசெயனுகியப் பிரமேயனுகியே நாக
வான்மகனுய்க், களிதருஞ்சகள நிட்களனுகிக்கரிபதா
ய்க் காசிநாயகனுந், தெளிவுறுவிசுவநாதனைத் தின
முஞ் சிந்தையிற் பணிந்துபோற்றுதுமே. (6)

ஆசையையகற்றிப் பிறரிகழ்வொழித்தேயகந்த
னிசையினையகற்றி, மாசமாதியினினினைவினை நிறுவி
மகிழிருதயமரைநடுவி, லாசறவமர்பரே சனுங்காசியரு
ம் பதிக்கிறைவனேயான, தேசுறு விசுவநாதனைத்தின
முஞ்சிந்தையிற்பணிந்து போற்றுதுமே (7

காமமாதியபுன்மாசி லனுகிக் கருதருந்தவர்க்கரு
ள்பவனுய்ச்,சேமவைராகச்சாந்தியின்னிலயச்செல்வனு
ய்க் கிரிஜையின்றுணையாய், வீமமாதுரியசுபகனுய் விட
ங்கொள்வீரனுய்க்காசி நாயகனுந், தேமுறும் விசுவநா
தனைத்தினமுஞ் சிந்தையிற் பணிந்துபோற்றுதுமே()

காசிநாயகனும் பரசிவற்புகழுங் கருதருந்துதியி னட்டகமா, மேசறுமிதனையெவன் படித்திடுவனெனை யிலாவின்பொடு திருவைக் காசுறு மனந்தகீர்த்தியை யரியகல்வியை யடைந்தவன் முடிவில், வாசனையறுத்து முத்தியையடைவன் வாழிநம்விர மாதவனே. (9)

ஸ்ரீ வேதவியாசராற்றிருவாய் மலர்ந்தருளியதாம் வீர். க. சுவாமிகளான் மொழிபெயர்த்ததாய ஸ்ரீ விசுவநாதர்ட்டகம் சம்பூர்ணம்.



காசிநாயகனும் பர...
னட்டகமா, மேசநு...

| | ரூ. அ |
|---|---|
| யிலாவின்செதசி ...வாலம்) | ...10—0 |
| ...பரிய...ருத்திப்பிரபாகரம் .. ... .. | 4—0 |
| விசாரசாகரம் .. ... ... | 3—0 |
| விசாரசந்திரோதயம் ... ... ... | 1—4 |
| ஹடயோகப்பிரதீபிகை .. ... ... | 1—8 |
| பாலபோதம் ... .. ... ... | 1—0 |
| விருத்திரத்நாவலி ... ... ... | 0-12 |
| சங்கராகிரந்தாவலி. | |
| க. அபரோக்ஷாநுபூதி .. ... ... | 0—6 |
| உ. ஆத்மபோத, தத்துவபோதம். ... .. | 0—5 |
| வேதாந்தபரிச்சேதம் ... ... ... | 0—6 |
| தருக்ககௌமுதி ... ... ... ... | 0—6 |
| கீதைக்கோத்து. | |
| க. உத்தரகீதை ... ... ... ... | 0—4 |
| உ. ராமகீதை ... ... ... ... | 0—3 |
| ந. குருகீதை .. .. ... ... | 0—6 |
| தத்துவமஸிமகாவாக்கியம். ... .. | 0—2 |
| பிரஹ்மவித்தாசீர்வாதபத்ததி ... .. | 0—1 |
| சுந்தரராஜா ... .. ... ... | 0—8 |
| கங்காயாத்திராதீபிகை ... ... ... | 1—8 |
| தசகாரிய விளக்கம் ... ... ... | 0—8 |
| சர்வஞானோத்தரம் ஞானபாதம் ... .. | 0—1 |

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ்,
ஸ்ரீ சாரதாமந்திர புத்தகசாலை,
வடக்குவீதி தஞ்சாவூர்.